# சிலம்பின் முதல் ஒலி



பேராசிரியர். டாக்டர். வெ. சு. அழகப்பன்,
எம். ஓ. எல்., எம்லிட்., பி. எச்டி
தமிழ்த்துறை, அழகப்பா கல்லூரி, காரைக்குடி-3.

**கண்ணம்மை பதிப்பகம்**
8-ப. அ. லெ. தெரு,
காரைக்குடி-623001

உ

# படையல்

## அன்னேயார் திருமதி. கண்ணம்மைக்குப் படையல்.

அரசுநிகர் பெருவாழ்வை முன்பு தந்தாய்.
ஆக்கத்தால் எந்தைக்கும் வலிமை சேர்த்தாய்.
பரசுபுகழ் கண்ணம்மைத் தாயே நீயோ,
பான்மைதரு இல்லறத்தால் உளத்துள் நின்ருய்.
வரத்தாலே இவ்வட்டத் தெய்வ மெல்லாம்,
வாழ்வுதர அறம்பலவும் நினைந்து செய்தாய்.
உரத்தாலே உயர்நாளில் ஒளிநீ யானுய்
உன்தாளில் ''சிலம்பொலியைப்'' படைத்தேன்
கொள்வாய்.

# பொருளடக்கம்



# அணிந்துரை

**மதுரை காமராசர்**
**பல்கலைக் கழகம்**


**டாக்டர் வ. சுப. மாணிக்கம்.** பல்கலைநகர்.

துணை வேந்தர். மதுரை - 625021


நாள் 14 - 1 - 82

சிலம்பின் முதலொலி என்ற இக்கட்டுரைத் தொகுதி திரு. வெ. சு. அழகப்பனின் முதல் நூல். அதற்குப் பொருந்தவே முதற் கட்டுரையின் பெயர், நூலுக்கும் பெயராகியது. அம் முதற் பெயர்தானும் சிலப்பதிகாரத்தின் முதற் காதையாம் மங்கல வாழ்த்துப் பாடலை ஆராயக் காண்கின்றோம்.

இத் தொகுதிக்கண் சில்வேறு பொருள் மேல் பத்துக் கட்டுரைகள் உள. திருக்குறள் பற்றிய கட்டுரை மூன்று. அவை முறையே பொருட்பால், அறத்துப்பால், காமத்துப் பால்களில் சில கூறுகளை விளக்குவன. 'திருக்குறளும், அகத்துறையும்' என்ற தலைப்பில் உரைகளிடை உறழாய்வு புலனாகின்றது. ''ஒன்பதாம் நூற்றாண்டுச் சமய நோக்குகளையும் போக்குகளையும் ஈராயிரம் ஆண்டு பழமை மிக்க திருவள்ளுவர் நூலில் ஏற்றிக் காண்பது ஆசைபற்றி அறைவதாகுமே தவிர இலக்கிய நெறியாகாது'' என்ற அழகப்பனாரின் கருத்துரை சான்ற பொருத்துரையே.

ஆத்திசூடிகள் என்ற தலைப்பு அருமைப்பாடுடையது. நுண்ணிய ஆய்வுகள் ஒளி விடுகின்றன. மூவர்தம் ஆத்திசூடிகளை வகை வரிசைப்படுத்தி மேற்கோள் காட்டி விளக்கஞ் செய்திருப்பது பெரிதும் போற்றத்தகும். ஆத்திசூடி என்ற இலக்கிய வகை மறு பிறப்பெடுத்துப் பல்கி வரும் காலமாக இருத்தலின், இக்கட்டுரையை ஒரு நூலாக்கி விரித்தெழுத ஆசிரியர் முந்துகதில்

தமிழ் விடுதூது என்ற நெடிய கட்டுரை முழுமையும் விரிவும் தழுவியது. தனி நூலொன்றினை எடுத்தாய்திறன் ஆசிரியர்க்கு உண்டு என்பதனை இப்பெருங்கட்டுரை சான்றாகும்.

முதலொலி முப்பது ஒலியாக வளர்க.

மதுரை
திவ. க. தை உநகஉ
14—1—1982

**வ. சுப. மாணிக்கம்.**

# முன்னுரை

கற்றதை விரித்துரைக்காமை குற்றம் என்பார் வள்ளுவர். நாரு மலர் சிறப்பாகுமா? இருபதாண்டுப்பணியில் என் அறிவில் பட்டதை விரித்துரைக்க விழைந்தேன்! ''சிலம்பின் முதல் ஒலி'' என்ற இந்நூல் எனது முதல் முயற்சி. இதிற் கண்ட பல கட்டுரைகள் ''தமிழ்நாடு'' நாள் இதழ்களிலும், சில - சிற்சில மலர்களிலும் தமிழாசிரியர் ஆய்வுக்கோவை களிலும் வெளிவந்தவை இதன்கண் பத்துக்கட்டுரைகள் உள.

''தமிழ்விடு தூது'' வானொலியில் ஒலித்தது. ''திருவள்ளுவரின் கல்விக் கொள்கை'', திருக்குறள் கூறும் வாழ்வு நெறி'' என்பன சுழற்கழகத்தே பேசியவை. ''மகளிர் விளையாடல்கள்'', ''ஆத்திசூடி'' ஆகியவை இதற்குமுன் அச்சில் வராதவை. இவை, வெவ்வேறு காலங்களில் எழுதப் பெற்றவை. ஒருமை கருதியும் ஒழுங்கு கருதியும் இப்பொழுது வேண்டும் திருத்தம் செய்தேன். அப்படியும் வேறுபாடு தெரியின் அது கால நிலையால் வந்தது எனக்கருதிப்பயில்வார் பொறுப்பாராக!

சிலப்பதிகாரம் தமிழருக்குக்கிடைத்த வற்றாத கருத்துச் சுரங்கம் சீரிய நாடகக்காப்பியம். ஆங்கில நாடக ஆய்வாளர்கள் ஆங்கிலத்தில் ''முதற்காட்சியின் முக்கியம்'' என எழுதிய கட்டுரைகளைப்படித்த போது சிலம்பிற்கும் அங்ஙனம் செய்யும் ஆர்வம் வந்தது. அதன் விளைவே முதற் கட்டுரை. முதற்காப்பியம் என்பதால் அதுவே இந்நூற் றொகையின் ''பெயருமாயிற்று. அரசர்களின் போர்ச்செய்தி களை வரட்சியாகவும் மிகைபடவும் புலவர்கள் பாடியதே புறநானூறு'' என்பார் கருத்துப்பிழைபாடுடையது என்பதை

நிறுவுவது புறநானூற்றுவமைகள். திருக்குறளைத் தொடாத பெருங்காப்பியமோ, சிற்றிலக்கியமோ இல்லை. கல்வி-வாழ்க்கை-இலக்கியம் பற்றிய திருவள்ளுவரின் தெளிந்த புதிய - சிந்தனைகளை ஒருபானைப்பதமாகக் காட்ட மூன்று கட்டுரைகள் உள. பெண்டிரின் விளையாடல்களைப் பற்றிய பல நிலைகளை - அவை இலக்கியத்தில் பெறும் இடத்தை ''மகளிர் விளையாடல்கள்'' காட்டும். ''ஆத்தி சூடிகள்'' ஓர் ஒப்பீட்டுக் கட்டுரையாகும். தமிழ்விடு தூது'' - தமிழன் மாட்சியை - இறைக்காட்சியை நிறுவுவது. பாரதியாரின் நாட்டுப்பற்றை - கவியாற்றலைப் ''பாரதியின் பாஞ்சாலி'' பேசும். இந்நாளையப் புதினங்களின் போக்கை வகை தொகையோடு கட்டுரைப்பது ''புதினங்கள்''.

ஆகவே காவியத்தில் தொடங்கி, அறநூல்களைத்தொட்டுச் சமய இலக்கியங்களையும் பார்த்து, இக்கால இலக்கியம் வரை கண்டு தேர்ந்த பயன், பயில்வார்க்கு வருதல் காணலாம். ஆதலின் தமிழ் இலக்கிய வட்டத்தை ஒரு சுற்றுச்சுற்றியதாக ஆகிறது.

இந்தக்கன்னி முயற்சியில் நான் ஈடுபடக்காரணமான என் பேராசிரியர்களை இந்த வேளையில் நான் நினைதல் வேண்டும். தமிழ் ஊற்றம் தந்து தமிழுக்கு ஆற்றுப்படுத்திய என் ஆசிரியர் டாக்டர். தமிழண்ணல் அவர்கள் அன்றும் இன்றும் என்னை மாணவனாகவும் நண்பனாகவும் நினைந்து, உதவிவருகிறார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் எனக்குப்பேராசிரியராக விளங்கித் தாயினும் சாலப்பரிந்து தமிழ் ஊட்டி மறக்கவொண்ணா உதவிகள் செய்து ஆதரித்தவர்கள் பேராசிரியர். திரு. லெ.ப.கரு. இராமநாதன்செட்டியாரவர்களாவர். எனக்குத்தமிழ்ப்பால் அருத்தி, சன்மார்க்க சபையில் முதல்வர் பதவி ஈந்து, தமிழ்ச் சான்றோர்களை அறிமுகஞ்செய்து வைத்து, எம்லிட், டாக்டர் பட்டங்கட்கு வழிகாட்டி, ஆய்வுக்கண்ணைத் தந்து, புற துறைகட்குப்போய் விடாமல் தமிழ்த்துறையில் நிலைபெறச் செய்தவர்கள் டாக்டர். வ. சுப. மாணிக்கனாராவர். இம்மூவரும் எனக்கு

மும்மூர்த்தியாவர். என்நெஞ்சம் திறப்போர் இவர்களைக் காண்பர். இவர்கட்கு என் நெஞ்சார்ந்த நன்றியும் வணக்கமும் உரியன.

இந்நூற்கு மதுரை காமராசர் பல்கலைக்கழகத் துணை வேந்தர் செம்மல். டாக்டர். வ. சுப. மாணிக்கனாரின் அணிந்துரை பொங்கற் புதுநாளில் கிடைத்தது அணியுள் அணி. பேறினில் பேறும். அவர்கட்கு நனி நன்றி செப்புவேன்.

என் அறிவுப்பசியினுக்கு உணவு தந்து உதவி வரும் என் பேராசிரியர்கள் டாக்டர். இரா. சாரங்கபாணியார், கோ. சிவகுருநாதனார் ஆகியோருக்கும் நன்றி. இந்நூலை வெளியிடுவதில் நாளும் நாட்டம் காட்டி உசாவி ஊக்கிய என் கெழுதகை நண்பர் பேராசிரியர். திரு. இராம. இராமநாதனுக்கும், சிற்சிலபடிகள் அச்சுப்பார்த்துதவிய இனிய தோழர் பேராசிரியர். திரு. கா. முருகப்பனுக்கும் நாவால் நன்றி சொன்னால் போதுமா? திருத்தப்படி எடுப்பதில் பெரு முயற்சி எடுத்து உதவிய என்மருகர் திரு. அரு. சிதம்பரம் அவர்கட்கும் நன்றி. ஆர்வத்தோடு அச்சிட்டு உதவிய மதுரை விஜயா பிரிண்டர்ஸ் திரு. சொக்கலிங்கனுக்கும் நன்றி உரியது.

எல்லாவற்றிற்கும் மேலாகப்பயில விழையும் தமிழ் ஆர்வலருக்கும், என்னக நன்றி. தமிழகம் விரும்பி வரவேற்றால் இன்னும் சில நூல்கள் வெளிட விருப்பம். என் வழிபடு தெய்வம் பகவான் பாபா அருளுக.

தாங்கரும் தமிழைத்தாங்கும் தமிழ் நெஞ்சங்கட்கு வணக்கம்.

22 3—82
காரைக்குடி - 1.

அன்பன்,
**வெ. சு. அழகப்பன்.**

# 1. சிலம்பின் முதல் ஒலி.

***சிலம்பின் சிறப்பு :-***

சிலப்பதிகாரம் இலக்கிய உலகில் தனி ஒளி வீசும் ஓர் ஒப்பற்ற சுடராகும். ஏனெனில் அது முதற் காப்பியமாக முகிழ்க்கும் போதே தமிழ்க் காப்பியமாகப் பிறந்தது. அது மொழி பெயர்க்கப் பட்டதன்று. அந்நூலிற் கவிதைச் சிறப்பு உண்டு. ஆங்காங்கே உரை நடையும் உண்டு. வரலாற்றுச் செய்திகளையும் காணலாம். இயற்கை கடந்த ஆற்றல் குறைவு. இன வாழ்க்கையைக் காட்டி, உணர்ச்சியை ஊட்டி, உள்ளம் தொட்டு நடக்கும் இயல்பு மிகுதியாகக் காணப்படுகிறது. இவ்வாறு அஃது இலக்கிய உலகில் தனி இடம் பெறுகிறது.

'மங்கல வாழ்த்துப் பாடல்' தான் சிலம்பின் முதல் ஒலி. இப்பகுதி மூன்று பிரிவாய் அமைகிறது. 1, வாழ்த்தும் நாட்டுச்சிறப்பும். 2. காப்பியத் தலைவி தலைவன் ஆகியோரை அறிமுகம் செய்தல். 3. மணவினைப் புணைவு என அமைகிறது. இவற்றின் நல்லியல் நலன்களைக் காண்போம்.

**இயற்கை வழிபாடு :-**

இறைவனை வணங்குவதும் வாழ்த்துவதும் பண்பும் பயனும் ஆகும். அப்படி வாழ்த்துவதும்

நாம் வாழத்தான். இங்கே வாழ்த்தில், இளங்கோ அடிகள் இரண்டு புரட்சிகளைச் செய்திருக்கிறார். இறைவனை வணங்கிக் காவியத்தைத் தொடங்க நினைக்கும் இளங்கோ, இயற்கையையே வணங்குகிறார். இவ்வியற்கை வணக்கம் ஒரு புரட்சியாகும். திங்கள், ஞாயிறு, மழை ஆகியவற்றை வணங்குகிறார்.

**"திங்களைப் போற்றுதுந் திங்களைப் போற்றுதும்**
**கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடை-**
**போன்றிவ்**
**வங்க ணுலகளித்த லான்"—**

என்பர். இப்படியே ஞாயிறு, மழை முதலியனவும் காரணங்காட்டி வணங்கப்படும். பிறர், எடுத்துக் கொண்ட செயல் இனிது முடிய இறையை வழிபடுவர். இவரோ இயற்கையின் செயலும் அரசன் செயலும் ஒன்றாக இருப்பதால் வணங்குவதாகக் கூறுகிறார். இது மற்றுமோர் புரட்சியாம். இதே மரபைக் கவிச்சக்கரவர்த்தியாகிய செயங்-கொண்டாரும் பேணி எடுத்துக் கொள்ளுகிறார். கலிங்கத்துப்பரணியில் இதே வகை வணக்கத்தைக் காணலாம்.

சிலம்பாசிரியருக்கு உருவ வழிபாடு உடன்பாடுதான். சிவனை, "நிலவுக் கதிர் முடித்த நீளிருஞ் சென்னி, உலகுபோதி உருவத்து உயர்ந்தோன் சேவடி" என்று கூறி வணங்குகிறார். இவ்வாறே பிற தெய்வங்களும் பேசப்படுகின்றன. ஆயினும், இளங்கோ, 'மங்கல வாழ்த்தில்' எந்தத் தெய்வத்-தையும் எடுத்தியம்பிப் பரவவில்லை. கம்பரைப்

போலவோ, திருத்தக்கதேவரைப் போலவோ, சேக்கிழாரைப் போலவோ, இளங்கோ வழிபடு தெய்வத்தைப் பேசிக் காவியத்தைத் தொடங்கினுர் அல்லர். எந்தச் சமயத்தாரும் விரும்பிப் படிக்கும் வண்ணம் இளங்கோ காவியயாப்புச் செய்கிருர். பலரும் ஏற்கப் பல்லாண்டு பாடுகிருர். இஃதோர் தனிச் சிறப்பே.

**நாட்டுச் சிறப்பு :-**

மங்கல வாழ்த்தில் நாட்டு இயல்பு புனையப் படுகிறது. நாட்டு வளம் கூறுவதற்கென்றே பிற் காலப் புலவர்கள் தனிப்படலமோ, இலம்பகமோ செய்தனர். படிப்போருக்குச் சோர்வு கூட ஏற்படும். ஆனுல் இளங்கோ மிகச்சில அடிகளிலே நாட்டுப் பெருமையை இயல்போடு கூறுகிருர். காவியத்-திற்கு வேண்டுவதாய கற்பனை கனிய அளவோடும் நயத்தோடும் புனைகிருர்.

புகார் நகரில் அரசனும் தலைக்குடி மகனே. "பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த" திருநகராக அது காட்சி அளித்தது. இங்கே செயற்கைப் பகையான பிறநாட்டுப் பகை, உள் நாட்டுப் பகை ஆகிய இவை இல்லை. இயற்கைப் பகையான வறுமை, விலங்கின் கொடுமை, திருட்டு, அறமில்லாத செயல் ஆகியவையும் குறைவே. இவை எப்போதாவது நிகழ்ந்தாலும் அரசன் ஒறுப்பான். அவன் தவறினுல் பூதம் தக்க தண்டனை தரும் இப்படி அறம் நிலைநிறுத்தப்

பட்டது புகார் நகரில் நிலவழி வருவாயும், கடல் வழி வருவாயும் மிக்கோங்கும் வண்ணம் வணிகர் பெரிதும் பாடுபட்டனர். ஆகவே பொருள் வளம் கொழிக்கும் பொன் நகராகப் புகார் பொலிந்தது. புகார் மக்கள் அமைதியும் இன்பமும் மிக வாழ்ந் தனர். அவர்களது இவ்வின்ப அமைதி, யாவற்றை யும் துறந்த முனிவரின் இன்பத்தையும் அமைதி யையும் ஒக்கும். இவற்றைப் பெற அம் முனிவர்கள் துறந்தனர். புகார் மக்களோ எதையும் துறக்காமலே இவற்றை நுகர்ந்தனர். இது அந்நகர மக்களுக்கே உரிய தனிச் சிறப்பு. இவ்வாறு ஒரு நகரத்தின் இயல்பான நலத்தை நயம்பட உரைக்கிருர்.

நாகநீள் நகரான சுவர்க்கம் புகழுக்குப் பெயர் பெற்றது. நாகநாடு போகத்திற்குச் சிறந்தது. இவ்விரு தனி இயல்புகளையும் புகார் ஒருங்கே கொண்டு விளங்கியது. ஆகவே தேவர்கள் நயந்து நுகர்ந்த இன்பமெல்லாம் இம்மண்ணுலகிலேயே புகார் மக்களுக்குக் கை கூடியது. ஆகவே, "புகழ் மன்னும்" புகாராகத் திகழ்ந்தது.

இவ்வாறு முகவுரை செய்யும் கவிஞர், பிறகு தலைவி தலைவன் ஆகியோர் தகவுகளைப் புலப் படுத்துகிருர். இங்கும் பெருகிய சொற்களைக் கையாள வில்லை. வள்ளுவரைப் போலச் சில சொல்லைப் பயன்படுத்துகிருர்.

**பெண்ணின் பெருமை :-**

புற உலகில் பெருகிய தொடர்பு கொள்ளும் ஆடவர், உலகப் புகழ் கொள்ள வாய்ப்பிருப்பது மிக இயற்கை. ஆனால் இல்லத்துக் கடமைகளைச் செய்து எங்கோ மூலையில் இருக்க நேரும் ஏழைப் பெண் உலக அரங்கில் நடமாடி, நம் உள்ளங்களில் படமாட இயலுவதில்லை. ஆனால் கண்ணகி, உலகறித்த ஒருத்தியாக ஆகிறாள். வாழ்க்கையில் கணவனால் ஒதுக்கப்பட்டிருந்த ஒருத்தி, உலக மக்களால் ஏற்றுக்கொள்ளப்படும் தகவு பெறுகிறாள். கற்பின் தரத்தாலே காசினி மெச்சும் காரிகை ஆகிறாள். ஆகவே, பெண்ணிற்கு இங்கு முதன்மை கிடைக்கிறது. பெண்ணின் பெற்றிக்குமுன் தகவில்லாத ஆண்மை தலைவணங்குகிறது. இவ்வாறு பெண்ணின் பெருமையை முதலில் பேசி புரட்சி செய்ய விழையும் கவிஞர் தலைவியையே முதலில் அறிமுகம் செய்கிறார். திருத்தக்கதேவரும் கம்பரும் தலைமகனுக்கு ஏற்றம் பேசுவதாலே தலைவனை முற்கூறினர். இளங்கோ அறங்களையே பெண்ணாக்கி அப்பெண்ணிற்கே முதன்மை தருகிறார். காதலுக்கு வித்தாகும் உருவமும் பருவமும் மிக்கவள் கண்ணகி என்றே கவிஞர் தொடங்குகிறார். 'ஈகைவான் கொடியன்னாள் ஈராறுண்டகவையாள்' என்று பேசுகிறார். "மாகவான் நிகர் வண்கை மா நாய்கன்" என்று அவள் தந்தையைப் புகழ்ந்து குடிப் பெருமையைக் கூறுகிறார். அப்பால் குலக்கொம்பாம் கண்ணகியின் வடிவழகையும்

மணத்திற்கு முன்பாக அவள் கண்டும், கேட்டும், கற்றும் இருந்த கற்பின் பெற்றி முதலாய தனிச் சிறப்பியல்புகளையும் பிற உயர் குணங்களையும் இளங்கோ அழகுறப் புனைகிறார்.

> "போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
> தீதிலா வடமீனின் றிறமிவ டிறமென்றும்
> மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
> காதலாள் பெயர்மன்னுங் கண்ணகியென் பாண்
> மன்னோ"

இப்படிக் கண்ணகியைப்பற்றிக் கூறுகிறார். அழகை எதனோடு ஒப்பிட்டாலும் எல்லை, அளவு ஏற்படும். அழகுத் திரளாகப் பேசப் பெறும் திரு மகளோடு ஒப்பிட்டு விட்டால் முற்றுப் பெறும் எனக் கவி நினைக்கிறார். அதுவும் பெண்களே ஒரு பெண்ணின் அழகைப் புகழ்வதாகக் கூறிவிட்டால் அவள் அழகில் குறை குற்றம் உண்டா என்ன? மற்றைய பெண்டிர் ஏற்றிப் புகழ்ந்ததற்கு வேறு ஒரு காரணமும் இருந்தது. கண்ணகி நல்ல குணம் மிக்கவள். வெறும் அழகு, நரை திரைக்குட்பட்டு நாளடைவில் அழியும், ஆனால் நற்குணம், பருவம் தாண்டியும் ஆணுக்கு விருப்பத்தையுண்டாக்கும். ஆடவரைச் சிறை செய்து காக்கும் சிறை காப்பு, இக்குணம் தான். கோவலனைப் பிற்காலத்தில் கட்டி ஈர்த்து நிலை பெறச் செய்யப்போவதும் இக் குணம் தான். இதனைக் கவி, "பெருங்குணத்துக் காதலாள்" என்ற சொல்லிற் பெய்து பின் நிகழ இருக்கும் கதைகளைப் புதைத்து வைக்கிறார். கண்ணகியின் அடுதொழில் வன்மை, விருந்து

ஓம்ப விழையும் பேரவா, தன்துயர் காணுத் தகைசால் இயல்பு, கணவனே அன்றிப் பிற தெய்வம் தொழாத பீடு, வேட்டுவரும் வணங்கும் தெய்வ வடிவு இத்தனையும் உடையவள் அவள் என்பதைப் பின்வரும் பகுதிகள் விளக்கும். இத்தனைக்கும் கருவாக, "வயங்கிய பெருங் குணத்துக் கண்ணகி" என்ற சொல் அமைகிறது. இதனை அறிமுகத் தொடரிலேயே வேண்டும் என்றே வைக்கிறார். திருமணத்திற்கு முன்பே இவள் கற்புடையவள் என்று கதையைத் தொடங்குகிறார். மேலும் இவள் கற்பிற்கு ஓர் உவமை கூறுகிறார். இங்கேயும் புரட்சி செய்கிறார். கண்ணகிக்கு முன் வாழ்ந்த இருடியின் மனைவி-யான அருந்ததியின் கற்பை உவமைப்படுத்துகிறார். உவமை எங்ஙனம் கூற வேண்டும்? அருந்ததி போலும் கற்பையுடையவள் என்பது தானேஇயல்-பாக இருக்கும்! ஆனல் இளங்கோ அடிகள் கண்ணகியின் கற்பிற்குச் சிறப்பு தந்து உவமை யையே மாற்றிக் கூறுகிறார். அருந்ததியின் கற்பு கண்ணகியின் கற்பை ஒத்தது என்றார். வடமீனின் திறம் இவள் திறம்" என்று மொழிகிறார். இங்ஙனம் புராண உவமையைக்கூறினும் மானிடப் பெண்-ணின் மதிப்பை உயர்த்தி விடுகிறார். இச்சிறப்பை மங்கல வாழ்த்தில் மேலும் இரண்டு இடங்களில் குறிக்கிறார். "சாலியொருமீன் தகையாளை" என்றும் "அங்கண் உலகின் அருந்ததியன்னாளை" என்றும் பாராட்டுகிறார். இவ்வாறு இவ்வொலி இறுதி வரை கேட்டுக் கொண்டே இருக்கிறது. இப்படி

அறிமுகத்தொடர் சிலவாக இருப்பினும் சிறப் பாகவும்பின் நிகழ்ச்சிகளை உட்கொண்டும் ஒலிக் கக் காணலாம். கதைப் பொருளைத் தொனிப் பொருளாக வைத்துப் பேசுவது ஒரு நாடக உத்தியன்ரோ?

**தலைமகன் அறிமுகம் :-**

காப்பியத் தலைமகனின் அறிமுகமும் இவ்வாறே அமைக்றது. கோவலன் பிறந்த குடி மிக உயர்ந்தது எனக் கூற நினைக்கிறார். மா நாய்கனை (கண்ணகியின் தந்தை) விட உயர்ந்தவர்கள் என்று கூறுகிறார். அவன் பொருள் கொடுத்துப் புகழ் கொண்டவன். கண்ணகியையும் கொடுத்துப் புகழ் கொண்டான். மாசாத்துவனோ பெருமை, செல்வம் — எல்லாவற்றாலும் அரசனை ஒத்தவன். ஆதலின் அரசனைக் குடிமுதல்வனாகக் கொண்டவன் என்றார். "பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த ஒரு தனிக் குடிகளோடு உயர்ந்தோங்கு செல்வத்தான்" என்று புகழப் படுகிறான். இப்படிப் பெண் வீட்டை விட மாப்பிள்ளை வீட்டாரை உயர்வு என எண்ணுமாறு உயர்த்திக் காட்டுகிறார். இவருக்குப் பிறந்தோர் இழைப்பரோ பிழைப்பு? என்று நாம் எண்ணு கிறோம். ஆனால் பிழை செய்து விடுகிறானே கோவலன்! ஆனால் அந்தக் குறிப்பைக் கவி முதற்பகுதியில் வெளிப்படையாகக் காட்டவில்லை. கவிக்குக் காவியச் சுவை குன்றாமல் நடத்தும் பொறுப்பு உண்டு. ஆகவே வேண்டுமென்று கவி, சிலவற்றை மறைக்கிறார்.

இங்கே கோவலனைச் சிறப்பாகப் புகழ்கிறார். ஆடவர்க்குப் புகழ் இன்றியமையாதது. புகழுக் குரிய காரியங்களை அவன் செய்ய வேண்டு மென்பது கருத்து. கோவலன் இவ்வாறு நல்ல காரியங்கள் சில செய்திருந்தான். மேலும் இவன் செய்ததை விட இவன் முன்னோர் செய்த காரியங் களும் இவன் புகழுக்குக் காரணமாயின. இவன் செவ்வேளை ஒத்த பேரழகன் என்று பெண்டிரே விரும்பிப் பாராட்டும் அழகுடையவனாக இருந் தான். இவ்வாறு கவி கோவலனை அறிமுகம் செய்கிறார் ஆனால் காவியத் தலைவனுக்கு இன்றி யமையாது கூறவேண்டிய நல்லியல்பைக் குணச் சிறப்பைக் கூறவில்லை. கண்ணகிக்குக் குணச் சிறப்புக் கூறியிருக்கிறார். இவனுக்குக் கூற வில்லை. ஏன்? ஒழுக்கம் குன்றிய ஒருவனை நலம் பாராட்டக் கவியின் நெஞ்சம் தயங்குகிறது. "மண் தேய்த்த புகழினான்" என்று கூறப்படுகிறான். இப்புகழ்ச்சி முன்னோரால் இவனுக்குக் கிடைத்தது. ஆயினும் கோவலனை அறவே தீயவன் என்றும் கூற முடியாது மாடலன் என்பவன், "கருணை மறவ" என்று அவன் வீரத்தையும், "செல்லாச் செல்வ" என்று அவன் கொடை உள்ளத்தையும், "பல்லாண்டு புரந்த இல்லோர் செம்மல்" என்று அவன் அருள் உள்ளத்தையும் பாராட்டிப் பேசு-கிறான். கானல்வரியிலும், வேட்டுவவரியிலும் யாழ்வாசித்தும் ஆட்டம் கண்டும் தன் கலை வல்ல மையைக் காட்டுகிறான். ஒரு மகனுக்கு வேண்டும் இவ்வியல்புகள் இருந்தும், ஒரு கற்புடைய

பெண்ணிற்கு ஏற்ற கணவனுக அவன் வாழ வில்லை. இவ்வொழுக்கம் இன்மையால் கவியின் வாழ்த்தையும் மதிப்பையும் அவன் பெற முடியவில்லை. இக்குறைகளை அவனே ஓர் இடத்தில் ஒப்புக் கொள்கிருன். அதுவும் தன் மனைவி முன்பு தலை கவிழ்ந்து மன்னிப்பாயாக என்று இரங்கி வேண்டும் போது உணர்கிருன்.

"குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த
இலம்பாடு நாணுந் தரும்"

எனக் கூறினன், மேலும்

"இருமுது குரவ ரேவலும் பிழைத்தேன்
சிறுமுதுக் குறைவிக்குச் சிறுமையுஞ் செய்தேன்
வழுவெனும் பாரேன்"—

இப்படிப் புலம்புகிருன். அதுவும் இறப்பதற்குச் சற்று முன்பாக இங்ஙனம் மொழிகிருன். இவற்றை யெல்லாம் கவி நினைக்கிருர். குணத்தைப் பற்றிக் கூருமலேயே அறிமுகத்தொடரில் விட்டு விடுகிருர்.

**வடிவழகு :-**

கண்ணகியும் கோவலனும் வடிவழகால் மிகப் பொருத்தமானவர்கள். "கதிரொருங்கிருந்த காட்சி போல்" என்று கண்ணகிக்குத் திங்களையும், கோவலனுக்கு ஞாயிற்றையும் உவமம் கூறுகிருர். இப்படிப் பொருத்திய மணத்தைக் காண்பது கண் செய்த தவமாகும் என்று நயம் மிளிர நவில்கிருர். ஆயினும் இருவரும் இயல்பால் இருதுருவமாகவே இருந்தனர். கண்ணகிக்குப் பிழை செய்து

கோவலன் வம்பப்பரத்தரோடு சுற்றித் திரிந்தான். கண்ணகியோ அமைதியின் இருப்பிடம். அறிவோடு செயல் செய்பவள். இவனோ உணர்ச்சியின் உறைவிடம். செய்து பின் இரங்கும் நிலையில்லாத மனம் உடையவன். இப்படிவேறுபட்ட இயல்பினராக இருந்ததால் நெடு நாள் கூடி வாழவில்லை. "ஆண்டு சில கழிந்தன" என்றே கவிஞர் குறிப்பிடுகிறார்.

தலைமக்களின் அறிமுகத்திற்குப் பிறகு மணக்கோலக் காட்சி இழும் என்னும் ஓசையால் ஓவியம் போலத் தீட்டப்படுகிறது. இப்பகுதியில் சில வழக்காறுகளைக் காணுகிறோம்.

**மங்கலமரபு :-**

மங்கல நிகழ்ச்சியில் மன்னனை முன்னும் பின்னும் வாழ்த்துதல் மரபு. இஃது இன்றும் செட்டிநாடு, திருநெல்வேலி, தஞ்சை வட்டங்களில் காணக் கூடியதே. மக்கள் ஆட்சிக் காலத்திலேயும் இவ்வழக்கைக் காண்கிறோம். அன்று அரசனைக் குடிமுதல்வனாகவே நினைத்தனர். பெண்ணிற்குப் பன்னிரண்டு வயதிலும் ஆணுக்குப் பதினாறு வயதிலும் மணம் முடிக்கப் பெற்றது. "மருவின் மங்கல அணியே அன்றியும், பிறிதணி அணியப் பெற்றதை எவன்கொல்" என்ற கோவலன் கூற்றாலும் மணவிழாவில் தாலி புனைதல் உண்டு என்று அறிகிறோம். திங்களும் உரோகிணியும் கூடும் நன்னாள் திருமணம் நிகழ

ஏற்ற நாளாகக் கருதினர்எனத் தெரிகிறது. மேலும் சில வைதிகச் சடங்குகள் நிகழ்ந்தன. இறுதியில் ''காதலற் பிரியாமல் கவவுக்கை ஞெகிழாமல் தீது அறுக என ஏத்திச் சின்மலர் கொடு தூவி'' வாழ்வரசியர் தமிழில் நல்வாழ்த்துக் கூறினர். ''கவவுக்கை ஞெகிழாமல்'' ''தீது அறுக'' என்ற இந்த எதிர்மறை வாழ்த்துப் பின் நிகழ இருக்கும் அவல நிகழ்ச்சிகளைக் குறிப்பிற் சுட்டு வனவாம்.

இப்படி மணக்கோலக்காட்சியில் மங்கல மாகத் தொடங்கிக் கதை வளர்ச்சியில் துன்பியல் காப்பியமாய் முடிய முந்துகிறது. ஆனால் அவலச் சுவையைப் பக்திச் சுவையால் மூட்டம் போட்டுக் குறைத்து அமைதியும், வியப்பும் நிலவுமாறு காவியத்தை இளங்கோ செய்து விடுகிறார். அவர் தம் கைவண்ணத்தால் இது வெற்றி பெற்றுவிடு கிறது, இவ்வாறு 'சிலம்பின் முதல் ஒலியே' விருந்தாக அமையுமானால், முழு ஒலியும் இன் னிசையாக இனிக்குமன்றே?

''தேனிலே ஊறிய செந்தமிழின்—சுவை
தேரும் சிலப்பதி காரமதை
ஊனிலே உயிர் உள்ளளவும்—நிதம்
ஓதி யுணர்ந்தின் புறுவோம்! கவிமணி

தேசிய விநாயகம் பிள்ளை.

# 2. புறநானூற்றுவமைகள்

சங்கப் புலவர்கள் இயற்கையொடு இயைந்து வாழ்க்கை நடாத்தியவர்கள். என்ருே, கண்டும் கேட்டும் இருந்த பொருள்களையும், நிகழ்ச்சிகளை யும் தம் மனத்தே பதித்து, வாய்ப்பு வரும்போது தமது பாடல்களில் இணைத்து எழில்படக் கவி புனைந்தனர். இவர்களது கண்ணும் செவியும் மிக மிக நுட்பமும், ஆற்றலும் கொண்டவை. எந்தப் பொருளையும் ஆழ்ந்து நோக்கி இயற்கை கலையாமல் மனத்தே படியெடுத்தனர். இவ்வாறு கூர்ந்து நோக்கும் இயல்பும், கற்பனையும் இவர்களின் கவிதைகட்கு மெருகும் அழகும் தந்தன. இவற்றைக் கற்ற அரசர்களும் துய்த்து மகிழ்ந்தனர். பல்லா யிரம் ஆண்டு கழிந்த பின்னர், நாமும் பயின்று பாராட்டுகின்ருேம்.

**சங்க உவமையும் சிறப்பும் :-**

சங்கப் புலவர்கள் தமது கருத்தை மிகவும் வலியுறுத்திச் சொல்லவேண்டிய இடங்களில் எல்லாம், மிகப் பொருந்திய இயல்பான உவமை களைக் கையாண்டனர். அவ்வுவமைகளைக் கற்ருேர் மறக்கொண்ணுச் சிறப்பினவாய் அவை விளங்கு தலை அறிவர். சங்கச் செய்யுட்களில், வடிவு வண்ணம் என்ற வகையில் உவமைகள் அமைவது

ஒரு பகுதியாம். தொழில் பண்பு பயன் இவற்றின் அடிப்படையில் பிறக்கும் உவமை மற்றோர் பகுதி; இவையே மிகுதியாக வரும். நுண் பொருளான பண்பு உவமைகளைப் போற்றிச் சொன்ன நெறி, தமிழ் இலக்கியத்தின் செவ்விக்கு ஒரு சான்றும் இவ்வாறு உவமை சொல்லுங்கால் இயற்கை வனப்பையோ, மரம், விலங்கு முதலியன வற்றையோ வாழ்வியல் நிகழ்ச்சிகளையோ அப்படியே கண்முன் காட்டும் வகையில் சொல்லோவியமாகத் தீட்டியுள்ளனர். இவ்வுமை களிற் சில இன்று நமக்கு அரியனவாகவும், புரியாதனவாகவும் உள்ளன; அவற்றில் நமக்குப் பயிற்சியின்மையே காரணம். சங்கப்புலவர்கள் கூறும் உவமப்பொருள்களிற்பல கேள்வியளவி லேயே நாம் அறிய முடிகின்றதே தவிர, நேரிற் கண்டுணர வாய்ப்பில்லை என்பது மற்றுமோர் காரணமாகலாம்.

**உவமை வகைகள் :-**

தொல்காப்பியர் தொழில், பயன், வடிவு, நிறம் என்ற இந்நான்கை நிலைக்களமாகக் கொண்டு உவமைகள் பிறக்குமென்றார். சங்கப் புலவர்களின் உவமைகள் இவ்வடிப்படையில் செய்யப்பெற்றுள்ளன. இவற்றின் நிலைக்களத்துப் பிறக்கும் உவமைப் பொருட்கள் ஐந்து பெரும் வகைகளாக அமையக் காணலாம்.

அ. புலவர்கள் தாம் அன்றாடம் கண்ட மரம், செடி, கொடி, மலர், விலங்கு, ஊர்வன, பறப்பன,

நீந்துவன ஆகிய இவற்றின் வடிவையும் நிறத்தை யும் செயலையும் உவமைகளாக ஆக்கியுள்ளனர்.

ஆ. மக்களின் வாழ்க்கையில் நாளும் காணலாகும் பழக்க வழக்கம் ஒழுகலாறு வாழ்வியல்முறை இவற்றையும் உவமைகளாக யாத்தனர்

இ. தாம் அறிந்த இதிகாச புராணக்கதைகளை வேண்டுழி எடுத்து உவமையாகக் கூறியுள்ளனர்.

ஈ. அந்நாளில் நடந்த வரலாற்றுச் செய்தி களையும், அகம்புறம் ஆகிய இரு இலக்கியங் களிலும் உவமைகளாக ஓதியுள்ளனர்.

உ. நுண் பொருளாகிய பண்புகளையும் உவமை களாக்கித் தம் கருத்தை விளக்கியுள்ளனர்.

**ஒரே மாதிரியான உவமை :-**

புலவர் தம் அனுபவத்திற்கேற்ப உவமைகளைப் பலவாகக் கூறினும் அவற்றில், சிற்சில ஒரேமாதிரி யாகவும் ஒரே வகையாகவும் உள்ளன இங்ஙனம் ஒரே வகையான உவமைகளைச் சொல்லும் போது அடைச்சொற்களை மட்டும் கூட்டியோ, குறைத்தோ புதுக்கிக் காட்டுவர்; சிலபோது உவமைப் பொருள் ஒன்ருக இருப்பினும் உவமேயப் பொருளை மாற்றி வைப்பதும் உண்டு. இத்தகைய ஒரே வகையான உவமான உவமேயப் பொருள் களைக் காணும் போது நீண்ட கால மரபு ஒன்று இருந்தமை, நமக்கு நன்கு தெரிகிறது. இம்மரபினைப் புலவர்கள் வழிவழி தெரிந்து தம் பாடல்களில்

புனைந்துள்ளனர். எனவே, ஒரே வகையான உவமை அமைதல் கொண்டு, ஒரு புலவரின் காலத்தை முன்னென்றும் பின்னென்றும் கணிப்பது சாலாது

**புறநானூற்றுவமைகள் :-**

புறநானூற்றுப் புலவர் தம் உவமைகள் பலவும் அவ்வப்புலவர்களின் கற்பனை நலம்-புலமை நலம் இவற்றிற்கு ஏற்ப அமைந்துள்ளன. ஒரே பாட்டில் பல உவமைகளைத் தொகுத்த நிலையும் உண்டு. உவமைப் பொருட்களில் உயர்வுதாழ்வு பெருமை சிறுமை இருப்பதாக எண்ணி இப்புலவர்கள் விலக்கிவிடவில்லை. செருப்பிடைச் சிறுபரலை, பகைவருக்குத் துயர்தரும் மறவனுக்கும் (புறம் 257) எலியின் செவிக்குக் கோங்கம் பூவின் கொட்டையையும் (புறம் 321) ஊகம் பூவிற்கு, அணில் வாலையும் (புறம் 307) உவமையாகக் கூறினர். எறும்பு முதல் (புறம் 173) யானை யீருக (புறம் 101) உள்ள அனைத்துப் பொருளையும் உவமையாக்கியுள்ளனர். புலி, யானை, எருது இவை பலமுறை உவமைகளாக வருகின்றன.

எளிய மக்களாகிய உழவர், உமணர், தச்சர், கொல்லர், இழிசினர் ஆகியோரின் தொழில் தொடர்பான உவமைகளையும் புறநானூற்றில் காணலாம். அரசர்களை வாழ்த்தும் போது என்றும் நிலைத்து விளங்கும் ஞாயிறு, திங்கள் இவற்றை உவமித்தனர். நீண்ட காலம் வாழ்கவென அவர் களை வாழ்த்தும் போது பலவாகிய விண்மீன்

ஆற்றுமணல், மழைத்துளி இவற்றினும் மிகுதியாக வாழ்கவென வாழ்த்தினர். பெரும்பாலும் பன்மைப் பொருளைச் சுட்டுகையில் விண்மீன் முதலிய வற்றை உவமித்தனர். பல உண்கலங்களைக் குறிக்குமிடத்து விண்மீனை உவமையாகக் கூறினர்.

அரசர்களுடைய ஆற்றலையும் அருங் குணத்தையும் குறிக்கும்போது ஞாயிறு, திங்கள், வான், காற்று, தீயாகிய ஐம்பூதங்களினியல்புகளை உவமையாக இயம்பினர். அரசர், மக்களைக் காத்தற்குத் தாய் குழந்தையைப் பேணுதலைக் கூறினர். அரசர் செவ்வியுடைமைக்கும், அவர் கடமை தவருது கைமாறு கருதாது மக்களைக் காத்தோம்புதற்கும் மழையை உவமையாகக் கூறினர்.

புலவர்கள், புரவலரை நாடிச் செல்வதற்கு, கடலை நாடிச் செல்லும் ஆறும், பழமரம் நாடிச் செல்லும் பறவையும் உவமையாகின்றன. இளைய மகளிரின் அழகு, பொலிவு, நலம், பெட்பு இவற்றைச் சுட்டுகையில் ஊர்களின் வளங்களை உவமையாகக் கூறியுள்ளனர். நுண்பொருளான அறம், தாய்மை, குறிக்கோள்வாழ்க்கை, ஆகிய வற்றையும் உவமித்துள்ளனர். புராண உவமை களையும் கூறியுள்ளனர். சில வரலாற்று உவமை களையும் (புறம். 170, 174) புறநானூற்றில் காண லாம். புறநானூற்றில் இருநூற்று எண்பதுக்கும் குறையாத உவமைகள் உண்டு.

**உவமைப் புலவர்கள் :-**

புறநானூற்றில் சிறந்த உவமைகளைப் பல புலவர்கள் கையாண்டுள்ளனர். மிகச் சிறந்த உவமைகளை ஆளும் புலவர்கள் கபிலர், பரணர், ஔவையார், கோவூர்கிழார், முடமோசியார், மருதனிளநாகனார், பெருஞ்சித்திரனார் ஆகியோர் ஆவர். இவர்கள், கருத்தையும், கற்பனையையும் தமது பாடலுக்குயிராகக் கொண்டனர், ஓசைக்கு முதலிடம் கொடுத்தனர். எதுகைக்கும், மோனைக்கும் சிறப்பளிக்கவில்லை. அவற்றை உடம்பாகக் கொண்டனர். இது சங்கப் புலவர்களின் தனி இயல்பு.

புறநானூற்றில் நானில இயற்கை வருணனைகளையும் பருவகால வருணனைகளையும் வெவ்வேறு இடங்களில் காணலாம். சிலபோது புறப் பாட்டில், இயற்கை வருணனைகளிலேயே தொனிப் பொருளும், அடைமொழிகளிற் குறிப்பு மொழிகளும் வைத்துப் பாடியுள்ளனர். இங்ஙனம், புறப்பாட்டிலும் அகப்பாட்டியல்புகள் சற்றே கலந்து வரக் காண்கிறோம். (புறம்-23) ஆதலின், புறநானூறு அரசர்-புலவர் இவர்களின் வரலாறு பேசும் ஏடாக மட்டும் இல்லாமல், உவமை நலம் கனிந்துள்ள கவிக்களஞ்சியம் எனவும், கற்போர்க்கு உவகை தரும் இலக்கியம் எனவும் உணரலாம்.

# 3. திருவள்ளுவரின் கல்விக் கொள்கை

**முன்னுரை :-** ஒருகனி, சுவையும் சத்தும் நிறைந்திருக்குமானால், அது விளைந்த மண் வளத்தையும் மரத்தின் தன்மையையும் சேர்த்தே எண்ணுவோம். திருக்குறளை அனைவரும் கொண்டாடுகிறோம் என்றால் திருவள்ளுவரின் அனுபவமும், அறிவுத்திறனும் சேர்த்தே விளங்குகிறது. திருக்குறள் சங்கச்சார்பு நூல்கட்கும் அவற்றின் பின் பிறந்த நூல்கட்கும் மேல் வரிச்சட்டமாக - விரிவுரையாக விளங்கக்காணலாம். திருக்குறள் காலங்கடந்த மெய்ம்மைகளைப் பேசுவதால் எக்காலத்திற்கும் ஏற்றதாய் - இணைப்பு இலக்கியமாய்—பொதுமைப்பனுவலாய் பொதுளப் பார்க்கிறோம். நீதிகளை இத்துணை இலக்கிய நயம் ததும்ப வேறு யாரும் விறல்பட மொழியவில்லை. தனி மகனின் செம்மை - சமுதாயச் செம்மை - இவ்விரண்டிலும் அறம் என்பதே வள்ளுவம்.

**கல்விக் குறள்கள் :**

133 அரும்பொருளைப் பற்றிப் பேசிய திருவள்ளுவர், கல்வித் துறையைப்பற்றி நீள நினைந்தார். இது தொடர்பாகச் சுமார் ஐம்பது குறட்களைத் தொகுத்து எண்ணித் தெளிவதே

இதன்நோக்கம். கல்வித் தொடர்பான திருக் குறள்களை மூன்று அதிகாரங்களிலும் காணலாம். கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, ஆகிய இவ்வதிகாரங்கள் நேரே கல்விபற்றியவை. மெய்யுணர்வு, அவையஞ்சாமை, அவையறிதல், சொல்வன்மை ஆகியவை சார்புப் பொருளின. மக்கட்பேறு, தூது, ஒற்று, அமைச்சு, நட்பு, பேதமை, புணர்ச்சிமகிழ்தல் ஆகிய அதிகாரங் களில் கல்விச் செய்திகள் வருகின்றன. ஆகவே சுமார் எழுபதற்கும் மேற்பட்டன கல்விச் செய்தி களைக் கூறுகின்றன எனலாம்.

திருவள்ளுவரின் கல்விக் கொள்கை ஏற்றம் மிக்கவை - எழுச்சியானவை — நலம் பயப்பவை. தம் கொள்கைகளை உடன்பாட்டு வகையாலும் எதிர்மறை வகையாலும் மொழிகுவர். இறைமாட் சிக்குப்பின் கல்வியை வைக்கக்காரணம் என்ன? அரசன் கல்வியாளனுய் இருத்தல் வேண்டும். அதனோடு அவன் தன் மக்கள் கல்விபெற வகை செய்ய வேண்டும் என நினைந்தார். கல்விப் பயிர், யாண்டும் விளைய, அரசு அக்கறை காட்ட வேண்டும் என அன்றே அவர் தெரிவித்தார். பொருட்பாலில் கல்வி இரண்டாவதாக இடம் பெற்றது இதனுலேயே! மேலும் கல்வி பற்றி நான்கு அதிகாரங்கள் பேசியதும் இதன் இன்றியமையமயை உணர்த்தும்.

**கல்விக் கோள் :**

கல்வியை இப்படிக் கற்கவேண்டும், இவற்றை மட்டும் கற்க வேண்டும் கற்காமையால் இன்ன

தீமைஉண்டு, கற்ருல் இன்ன நன்மை உண்டு; கற்றவர்கள் இதை விலக்க வேண்டும். இதைச் செய்யவே கூடாது. இப்படித்தான் இருக்க வேண்டும் என்றவாறு எல்லாம் வள்ளுவர் கூறுவாராயினர். சில புதுக்கருத்துக்களையும் வழங்கினர்.

படிப்பவற்றை ஐயம் அறப்படி. படிக்கத் தக்கவற்றைப்படி, படித்தப்பின் அதன்படி நட என்பது அவர் ஆணை. இங்கே இரண்டு புரட்சிக் கருத்துக்கள் உண்டு. கண்டதைப்படிக்காதே உன் தேவைக்குரிய - அரியனவற்றைப்படி எனக்கால அருமை துறை அருமை சுட்டினர். இனி, படிப்பின்பயன் செயலாக மலரவேண்டும் என்பார், "நிற்க அதற்குத்தக" என்ருர். படிப்பு நெஞ்சிலே படிந்து, செயலிலே வடிவம் பெறல் வேண்டும் செயற்படாக் கல்வி பயனில் அழகாம் ஆகவே வள்ளுவர், "பயவாக்க ளரனையர்" எனவும், "மண்மாண் புனைபாவை யற்று" எனவும் உவமையால் கேலி பேசினர். படி என்ற சொல்லே- படிதல் என்ற அடிச்சொல்லின்வழி பிறந்தது' கல்வியைக் "கண் என்ப" என்றதால், கண்டு செயல் நடவடிக்கைக்குரியதாய் ஆக்கல் என்ற பொருள் வருதல் காண்க.

**பயிலும் முறை :**

செல்வர் முன், வறியவர் தாழ்ந்து ஏங்கி நின்று பொருள் பெற்று உவப்பது போல், மாணவன் ஆசானிடம் பணிவு காட்டி, கற்பதில் ஆர்வம்

காட்டி, கற்றல் வேண்டும். கற்றவர்கள் கூடிக் கற்க வேண்டும். அவ்வறிவுப் பேச்சு பிரிவிற்குப் பின்னும் எண்ணி மகிழுமாறு இருத்தல் வேண்டும் (கு - 394) என்றார். தாம் கற்றதைப் பிறர்க்கு உரைத்துத் தம்மினும் கற்றவர்களிடம் மிகுதியும் கேட்க வேண்டும் என்றார். (கு - 724) இவை இக்கருத்தரங்கு கூடி விவாதிப்பதை ஒத்த ஒரு கருத்தேயாம். "கற்றார்முன் கற்ற செலச் சொல்லித் தாம்கற்ற மிக்காருள் மிக்க கொளல்" என்பது குறள். அறிவு, கற்றனைத்தூறும் இயல் பிற்று. ஆதலின் கல்வியாளன் பதவி, பணம் மூப்பு எனக் காரணங்காட்டிப் படிக்காமல் இருத்தல் வேண்டாம். என்றும்படி, சாம் அளவும் படிஎனப் புதுக் கல்விக்கொள்கை கூறுவர் (கு - 397) ஒரு முறை பாடுபட்டுக் கற்றுவிட்டால் புண்ணிய பாவம்போல் பல பிறவியும் பிழையாமல் அக்கல்விதொடரும் என்ற குறளில் (398) ஜீன்ஸ் பற்றிய அறிவியல் கொள்கை சுட்டியதாய்க் கருத இடன் உண்டே! ஒரு நூலைப்பயிலப்பயில நம் அறியாமை விளங்கும் என்பதால் நமக்கு அனுபவ அறிவு காலந்தோறும் மிகுந்து பலபொருள் தரும் என்று தெரிகிறது. இன்னோர் இடத்தில் "பயில் தொறும் நூல்நயம்" மிகும் என்ற கூற்றில் அறிவு வளரும் இயல்பிற்று என்பதைக் காட்டினார். இவை கற்கும் முறை. செல்வரினும் கற்றவரே மேலோர் என்ற கருத்தில் "கேடில் விழுச்செல்வம் கல்வி" (கு - 400) என்றார். கல்லாதவனின் அறிவான பேச்சையும் அறிஞர் ஏற்கமாட்டார்

ஆகவே கற்பது முக்கியம் (404)என நடை முறை உலகியல் சுட்டினுர். மேல்பிறவி-கீழ்பிறவி என்ற பாகுபாடு வீண் இதனையும் கற்பதால் மாற்றலாம். என்ற புரட்சிக்கருத்தையும் பேசினுர்' "கீழ்ப்பிறந்தும் கற்ருர் அனைத்திலர் பாடு" (409) என்பது குறள். பள்ளி சென்று ஆசானை அடுத்து நில்லாதவரும் கற்றவராகலாம் என்பது வள்ளுவர் சொல்லும் புதுநெறி எப்படி? கற்றவரின் நற்பேச்சைக் கேட்பதால் அறிவு தெரியலாம் என்பார் கேள்வியால் அறிவு பெருகும். அது உணவைவிட முக்கியம் (412) கேள்வியறிவு உடையார் தேவரோடு ஒப்பர் என்பார். (413)கேள்வி மனத்தளர்ச்சியை நீக்கும், வழுவராமல் காக்கும் (414, 415) என்பார். ஆகவே "கற்றிலனுயினும் கேட்க" என்ருர். வாழ்க்கை மேம்பாட்டிற்கு - செம்மைக்கு - கேள்வி வேண்டும். ஆன்ருேரை - கற்றவரை அடுத்து, எப்படி நடப்பது? எனக்கேட்டு அதன்படி நடப்பது வெற்றி வழியல்லவா? அதனைத்தான் வள்ளுவர் கூறுகிருர். இதனை "செல்வத்துள் எல்லாம் தலையாயசெல்வம்" எனப் புகழ்கிருர். விளம்பரத்திற்கு ஓர் ஆற்றல் உண்டு. இன்ருே விளம்பர உலகமாகஇருப்பதைக் காண்கிருேம். இல்லாத-பொல்லாதனவும் உண்மை போல்ஆகி, போலியுங்கூட, அசலை தோற்கடிப்பதைச் சிலபோது காண்கிருேம். இத்தீமைபற்றி வள்ளுவர் நினைத்து அரியஅறிவுரை பகர்ந்தார். பொய்களைப் பரப்புவர்களைப் பற்றி எச்சரிக்கிருர். கேட்பவர் - சொல்பவர் - இரு

சாராருக்கும் அறிவுரை சொல்லுகிறார். கேட்பவனைப் பார்த்துச் சொன்னார்..., "எனைத்தானும் நல்லவை கேட்க" (416) என்றார். பேசுகிறவனைப் பார்த்துச் சொன்னார் "சொல்லுக சொல்லில் பயனுடைய" (200) என்றார். சொற்சோர்வால் பகை வரும்; ஆகவே ஆக்கம் விரும்பினால் பேசுவதில் விழிப்பாய் அடக்கமாய் இரு என்ற கருத்தில் ஒரு அருங்குறள் செய்தார். "ஆக்கமும் கேடும் அதனால்வருதலால் காத்தோம்பல் சொல்லின் கண் சோர்வு" (642) என்றார். கல்விக் கேள்வியால் பணிவு வரும்(419) பணிவே, செல்வர்க்கும் செல்வம் என்றார். இவை உலக வளம் கருதி உரைத்தவை.

**கல்விப்பயன் :**

கல்வி அறிவால் நாம் இரண்டு முக்கிய படிநிலைகளை எய்துதல் வேண்டும். (1) எப் பொருளின் உண்மையான இயல்பையும் நுட்பமாக நாம் கண்டறிய வேண்டும். (2) பொறிகளையும் மனத்தையும் அவற்றின்வழி விடாமல் தீயதை விலக்கி நல்வழியில் செலுத்த வேண்டும். இவையே அறிவு வழி என்பார் (423,422) இவையும் வெற்றி வழிகளாம். இவ்வறிவு விளக்கம், வேறு எங்கும் எதிலும் காண முடியாது. "எதிரதாக் காக்கும் அறிவு" வேண்டும் எனவும், "உலகத்தொடு ஒட்ட ஒழுகல் அறிவு" என்றும் மொழிந்தார்.

இனிப் படித்ததைச் சொல்லத் தெரியாதவன் கல்லாதவனை விடக் கடையன் என்றார். கற்றதைச் சொல்ல மாட்டாதவன் பிணத்தை ஒத்தவன்

என்ருர். ''நாரு மலர்போல்வான்'' எனவும் வசை பாடினுர். என்ன கருத்து? கற்றதை யாவற்கும் சொல்லி சொல்லிச் யாவரும் பயன் எய்துமாறு செய்ய -வேண்டும் என்ற அவா சீரிய கருத் தல்லவா? கல்வி அறிவு பரவவேண்டும், நாள் வாழ்க்கையில் நீராய்ப்பாய வேண்டும் எனக் கல்விப் பயன் காட்டினுர்.

**கற்ருேர்க்கு ஆகாதவை :**

கற்றவன் செய்யத்தகாதன எனச் சில சுட்டினுர். அறிவற்றவரிடம் அறிவிலி போலவே பேசாதிருக்கவேண்டும். கீழோரிடையில் மறந்தும் நல்லன பேச வேண்டாம் என்ருர். ஏன்?பயன் விளையாது. அதற்குமேல் அறிஞனையும் இகழ்வர் ஆகவே சும்மா இருப்பதே சுகம். தீயார்பலர் நல்லன பேசினுல் துய்மையில்லா இடத்தில் அமிழ்தத்தை உகுத்து விணுக்கிய குற்றம் வரும். நன்மை விளையாத்தோடு அரிய பொருளும் வீணுகும். என்பது கருத்து, கற்றவன் சூது விரும்பக்கூடாது. தருமனும் நளனும் சூதால் கெடவில்லையா? படித்த வனின் மறதி, புகழ் கொல்லும் வழியாகும். படித்ததும் படித்தபடி நடவாதவன் முட்டாளை விடப் பெரிய முட்டாள் (834)இங்கு கல்வி பயன் சுட்டியதோடுஇலக்கிய நயமும் இருக்கிறதல்லவா? கற்றசான்ருேர் பொய் பேசக்கூடாது (299)அறிஞர் பயினில பேசக்கூடாது. தீய குழாத்தில் அறிஞர் சேரக்கூடாது. ஏன்? தீயவர் என்னதான் நல்ல நூல்களைக் கற்ருலும் மனம்திருந்தார். ஆதலின் அவரால் நன்மைவிளையாது பல நல்ல கற்றக்

கடைத்தும் மனநல்லார் ஆகுதல் மாணார்க்அரிது" (823) ஆகவே தீயார்பால் சேரக்கூடாது. கலப் பாலைத்துளி நஞ்சு துவரக்கொடுத்தல் போல் நல்லா ரையும் தீயார் மனக்கேடு (Brainwash) செய்து அழிப்பர். கும்ப கர்ணனும், கர்னனும் நல்லவராயும், வீரராயும், தருமமும் கருமமும் தெரிந்தவராயும் இருந்தும் தீய இனத்தால் அழிய வில்லையா? ஆகவே நல்லாரக்கு தீய உறவு கூடாது. ஆகவே தான் இறையடியார்கள் கூட "நள்ளேன் நின தடியாரோடல்லால்" எனவும் "ஆயும் பழைய அடியாருடன் கூட்டி" எனவும் முன்னறிவோடு வேண்டினார். மன நலன் இனநலத்தைப் பொறுத் தல்லவா? இக்குறள் உயிர் மூச்சுப்போல் என்றும் கற்றோரால் கொள்ளத்தகுவது. ஒருவர் தெரியாத வற்றையும் தெரியுமாப்போல நடித்தல்கூடாது என்பது ஒரு அறிவுரை. பயனில் செயலை நயப்பதும் தன்னை வியப்பதும் பிழை என்பது மற்றுமொர் நல்லுரை (439)

**கற்றோர் கைக்கோள் :**

கற்றோர் கடைப்பிடியாகக் கொள்ளத்தக்கன யாவை? கற்றோர் வழுவில் சொல் பேசல்வேண்டும். அது குலமுறையைக் காட்டும். எதுபோல்? மண் வளத்தைப் பயிர் காட்டல்போல். கேலிக்காகவும் சான்றோர் கெடுமொழி-இழிமொழி பேசக்கூடாது. "பிறர் தீமை சொல்லாச் சால்பினராய் (9 ɔ 4) இருத்தல் வேண்டும். நட்பைத் துறந்து தீமை செய்த இடத்தும் 'இன்னா செய்யா இயல்பினராய்" இருத்தல்வேண்டும். அ ர சி ய லி ல், சமயத்தில்

வாணிபத்தில், வஞ்சமும், பழிமனமும் இருத்தல் கூடும். ஆனால் கல்வி உலகில் இவற்றிற்கு எள்ளவும் இடன் இல்லை. படித்தோர் பிறிதின் நோய் தந்நோய்போல் போற்றும் அறிவு கொண்டவராய் இருக்கவேண்டும். அறிவுப்பசியாளருக்கு-உணரும் தரத்தார்க்கு மேலும் மேலும் கற்பிக்கவேண்டும். அது பாத்தியில் உள்ளபயிர்க்கு மேலும் நீர்விடுதல் போலாம். (718) இது, அறிவு வளர்ச்சியே வையக வளர்ச்சி என வள்ளுவர் நினைந்தார் என்பதைக் காட்டவில்லையா? இலக்கிய நயமும் இருத்தல் காண்க. பசிப்பிணி போக்குதலே நூலோர் பணியாக இருத்தல்வேண்டும். அதாவது வறுமை போக்கும் வாழ்வை அறிஞர் காட்டவேண்டும் என்பது எண்ணம் (322)

**வள்ளுவர் எச்சரிக்கை :**

வள்ளுவர் கற்றவர்கட்கும் பிறர்க்கும் சில எச்சரிக்கை விடுக்கிறார். கற்றவர்க்கு இறையுணர்ச்சி இல்லையேல் அக்கல்வியால் என்ன பயன்? உலகியல் நடைமுறையைத் துறந்து நீயாக ஒரு வழி நடந்தால், கற்றும் பயன் இல்லை. படித்தவரும் தவறி நடக்க வாய்ப்புண்டு. ஆதலின் கற்றோர் விழிப்பாய் இருக்கவேண்டும். "அரிய கற்றும் ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால் இன்மை அரிதே வெளிறு". ஆகவே ஏதோ ஒருவகையில் அவர்க்கும் அறியாமை இருக்கலாம். "நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றும்தன் உண்மை அறிவே மிகும்" எனவும் மனித மன இயல்பையும் செயற் பிழையும் ஓதினார். "யார் யார்வாய்க் கேட்பினும்

உண்மை அறிவே'' வேண்டும் எனத்தெருட்டினர். அறிஞராலும் நன்மையும் தீமையும் வரத்தானே செய்கின்றன. ஆகவே வாலறிவுடைய இறைவனே தூய அறிவினன் என்றார். நடைமுறை அனுபவ அறிவு மட்டும் அறிவன்று, அனுபவமும் முக்கியம்.

தமிழ் நூல்களில் அறிவும் அறமுமே மிகுந்துள்ளன. வள்ளுவரின் கல்விக்கொள்கையும் படிப்பு - நடப்பு பரப்பு என்பதே திரண்ட பிண்டமாகக் கொள்ளத்தகும்.

# 4. திருக்குறள் கூறும் வாழ்வு நெறி

**முன்னுரை – நூற்பெருமை :**

திருக்குறள் ஈராயிர ஆண்டுப் பழமையுடையது. திருவாசகம், திக்கோவையார், திருவாய்மொழி என்ற நூல்கட்குத் "திரு" என்ற அடைச் சிறப்பு வருதற்கு முன்னோடியாக இருந்தது. அத்துணைத் தொன்மை தோற்றம் உடையது. திருக்குறள். திருவள்ளுவர் என நூற் பெயரோடு ஆசிரியர் பெயரிலும் இவ்வடை அமைந்தது இந்நூலுக்கு மட்டுமேயாம். தெய்வப் புலவர், நாயனர், தேவர் என்ற சிறப்புப் பெயர் - திருவள்ளுவருக்கு மட்டுமே வழங்கக் காண்கிறோம். புலவருள் தனக்கென ஒரு நூற்றண்டை (சகாப்தத்தை) படைத்துக் கொண்டவரும் வள்ளுவரே. அத்துணைத் தலைமையும் தாய்மையும் மிக்கவர் திருவள்ளுவரே.

இல்லறத்தில் வள்ளுவர் காட்டும் சிறப்பு நெறி யாது? இன்பவாழ்வில் வள்ளுவர் காட்டும் சிறப்பு யாது? பொருளாதாரத்தில் வள்ளுவர் சுட்டிக் காட்டும் தனிநெறி என்ன? சமய நோக்கில் வள்ளுவர் குறிக்கும் நோக்கும் போக்கும் என்ன?

என்பன போன்ற கருத்துக்களைத் தொட்டுச் செல்வதே இக் கட்டுரை நோக்கம் ஆகும்.

**இல்லறநெறி :**

திருவள்ளுவர் 38 அறங்களை 380 குறளில் விரிக்கிறார். அன்புடைமைபோன்ற உடன்பாட்டு முகத்தாற் கூறும் அறங்கள் பல. அழுக்காறாமை போன்ற எதிர்மறை முகத்தான் வலியுறுத்தும் அறங்கள் பல. இவற்றுள்ளும் அவர் மிகமிக அழுத்திக் கூறும் நெறி யாவை ?

இல்லறத்தில் ஈடு படுவான், தன் மனைவி, மக்கள், விருந்து, அரசு முதலானவர்குச் செய்யும் கடன் சில உண்டு. அவை கடமையாகும். அவன் தலைநின்று பேணத் தக்கவை யாவை ? தன்னை நம்பி மூவர் உள்ளனர் என்பதை அவன் உணரல் வேண்டும். துறவி, ஏழை, இறந்து போன முன்னோர் இவர்களைப் பேணல் அவன் பொறுப்பு. துறவி அக்காலத்தில் சமுதாய அறத்தைக் காத்துத் தூய அறிவு வளர வழிகோலினான். ஏழ்மையால் வறுமைப் பட்டவன் எக்காலத்தும் இருப்பான் இறந்தோர்க்கு நீர்க்கடன் செய்தல் நன்றி இயல்பாம். இவை அவனது கடமை

> "துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
> இல்வாழ்வான் என்பான் துணை". (குறள் - 12)

என்றார் ஒவ்வொருவரும் தன் வருவாயை ஐந்து வகையாகக் கூறுபடுத்திப் பகுத்துச் செலவு செய்ய வேண்டும். என்பது வள்ளுவர் நெறி. அவை யாவை ? மூதாதையர், கடவுள், விருந்து சுற்றத்தி

தார், தான் என வரும் ஐவர்க்குத் தனித்தனி ஒரு கூறு செய்து செலவு செய்க என்றார். தனக்காகச் செலவிடுவது அறமா? ஆம். தன்னைப் பேணினால்தானே மற்றைய நால்வரும் பேணப் படலாகும். மேலும் தனக்கே சரிவு வரின் பிறரைப் பேணல் எங்ஙனம்? இதனோடு அரச வரி ஒரு கூறாம், அதனால் அன்றே "ஆறில் ஒன்றன்றோ புரவலர் கொள்ளும் பொருள்" என்றார் ஒரு புலவர். ஆக, ஆறுபங்கு செய்து நாம் வருவாயை வகுத்துக் கொண்டால் ஏழ்பிறப்பும் ஏமாப்புண்டு. மேற் சொன்ன கருத்தை எங்ஙனம் விளக்குகிறார்?

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தா றோம்பல் தலை" என்றார்

திருவள்ளுவர், பல நூல்களைக் கற்றுத் தெளிந்தவர். எல்லா நூல்களும் எதனைப் பெருமையாகப் பேசின என்பதை ஆய்ந்து தெளிந் தார். எல்லா நூலோரும் பலபடிப் பாராட்டிய அறம், பல உயிரையும் சாகவிடாமல் உணவினைப் பங்கிட்டு உண்டு மகிழல் என்று குறித்தார்.

"பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை" என்பதுகுறள். (322)

ஆகவே வள்ளுவர் பட்டினிச் சாவு கூடாது என்றார். இதனையே வேறு வகையாகவும் விளக் கினர். தவசியை விட இல்லறத்தான் சிறந்தவன். ஏன் தெரியுமா? தவசி தன் பசியைப் பொறுத்த தால் வலிமையானவன் ஆகிறான், அவனுக்கே கூட பசியின்வலி தெரியும் அத்தகைய பசியை ஆற்றும் திறன், இல்லறத்தானுக்கு உண்டு. ஆகவே இல்லறத்தானே மேன்மையானவன் என

விளக்கினூர்.

"ஆற்றுவா ராற்றல பசியாற்றல் அப்பசியை
மாற்றுவா ராற்றலின் பின் (குறள் — 225)

என்ருர் இனி, வேறு ஒரு முறையிலும் இதனை விரித்தார். செல்வர் தம் செல்வத்தை வைக்க வேண்டிய பணப்பெட்டி எது தெரியுமா? வறுமை யால் வாடிப் பசியால்வருந்தும் ஏழையின் ஒட்டிய வயிறே சிறந்த பெட்டி "அது அழி பசியை அழிக்கும். ஆகவே புரட்சிகள் உண்டாகா.மருட்சி-கள் வாரா, தளர்ச்சிகள் இல்லை தொழில் நிறுத்தம் இல்லை. இந்த அடிப்படை உண்மையை வள்ளுவர்

"ஆற்ருர் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்ருன் பொருள்வைப் புழி"

என்பதால் கூறினார்.

தேர்விற்குப் பயிலும் மாணவன், இறுதி நேரத்தில் தெளிவு கருதி மிகச் சிலவற்றை மட்டும் தேர்ந்து எடுத்துப்படிப்பது போல, திருவள்ளுவர் பல அறங்களைக் கூறினும் சிலருக்காகச் சில அறத்தை ஏன் இரண்டு அறத்தை ஒவ்வொருவரும் கடைப்பிடித் தொழுகினும் போதும் என்ருர் அவை யாவை?

"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று" (குறள் — 297

பொய் சொல்லாதே-என்ருர். மற்ருென்று காந்தி யடிகள் தாமும் வலியுறுத்தியது. கொல்லாமை-வேண்டும் என்ருர். இவ்விரண்டிலும் கூட கொல்லா அறமே தலையாயது என்பது அவர் கருத்து.

"ஒன்ருக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று" (குறள் 323)

ஆ க வே, இல்லறத்தான், தன்னல மறுப்பு உடையவனாக, பசி தீர்ப்பவனாக, பொய்யா அறம் கொண்டவனாக, கொல்லா விரதம் பூண்டவனாக வாழ்க—என்பதே அறத்துப்பாலின் திரட்டுப்பால். இதற்குச் சார்பு அறமே, பிறயாவும்.

இனி, இன்பியல் நெறி (காமத்துப்பால் உட்கிடக்கை) திரட்சியில் மிக முக்கியம் யாது? ஒருவருக்காக ம ற் ற வர் என்பதும், ஒருவரில் இன்னொருவர் கரைந்து போவதும் ஆகும். உடம்பிற்கு உயிர் போலவும், உயிர்க்கு உடல் போலவும், தலைவனும் தலைவியும் இன்றியமையாதவராவர். காதல் உலகில் தலைவன் பெரியவனா, தலைவி பெரியவளா ? எவராசை பெரிது ? இரவு நன்று, பகல் நன்று என்பன நாடக வழக்கு. இவ்வகை ஆராய்ச்சிக்கு இடனே வள்ளுவத்தில் இல்லை. 250 குறட்களை ஒருகால் ஓதினாலும் இவ்வோட்ட ஒழுங்கு நமக்கு விளங்கும். அங்கே ஒருவரை மற்றவர் அதாவது தலைவன் தலைவியையோ தலைவி தலைவனையோ ஆள்வதில்லை. இருவரும் ஒத்த நிலையினர். ஒருவர் தேவையை ஒருவர் உணர்ந்தவர்,

> "உடம்பொ டுயிரிடை என்னமற் றன்ன
> மடந்தையொ டெம்மிடை நட்பு (குறள் —1122)

ஒரு தலைவன், அவளுக்கும் எனக்கும் உள்ள உறவு உடம்பிற்கும் உயிர்க்கும் உள்ள இயைபை ஒத்தது என மொழிதல் காண்க.

இனி வள்ளுவத் தலைவியிடம் காணலாகும் சிறந்த குணம் யாது? தலைவன் பிழை செய்த போதும் பொறுத்துக் கொண்டு,அவன் புகழே பாடி

மகிழ்கிருளாம். அப்படியும் கூட இயற்கை தண்டிக் கிறதாம். அவன் பிரிந்த போது பசலை அவள் பால் படர்கிறதாம்.

**" உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால், கள்ளம் பிறவோ பசப்பு" (குறள் — 1184)**

இங்கே ஓர் அரிய பண்பை நாம் காணலாம். குற்றம், குறை வந்த போதும், தலைவியே தலைவனை இழித்துப் பேசலாமா ? இன்று என்ன காண் கிறோம் ? நான்கு பெண்டிர் கூடி ஊர்க்கதை பேசி இறுதியில் தம் வீட்டுக்கதைக்கு வந்துபின் தன் கணவனையே பழிக்கக் கேட்கிறோம். இது பிழையன்றோ? மாறாக இங்கே தலைவி பாராட்டு கிருள்; பொறுக்கிருள். காதல் வாழ்வில் வெற்றி வேண்டுமாயின் காதலர் ஒருவர் பிழையை மற்றவர் பொறுப்பதும் மறுபடி வாராமல் காப்பதுமே அவர் காட்டும் காதல் இன்பப் பழச்சாறும்.

இனி, வள்ளுவர் காட்டும் பொருளாதாரக் கோட்பாடு யாது ? அவர் முதலாளி தத்துவக் கொள்கையை உடன்படுகிருரா ? சோசலிச சமுதாய அமைப்பைக் கட்டுரைக்கிருரா ? வேறு கொள்கை உண்டா ? என்பது வினா.

முதல்வைத்துத் தொழில் உண்டு. அதனுல் ஊதியம்பெருகும் என்பதை **"முதலிலார்க்கு ஊதியம் இல்லை"** — (குறள் 449) என்ற குறளால் குறித்தார். செல்வம் பண்பிலான் இடத்தும் வரும். பெருந் தகையான் இடத்தும் அமையும் என்ருர். அறிவிலி இடத்தும் செல்வம் இருக்கும் என்ருர். மலை என்ருல் மடு என ஒன்று உண்டு. பள்ளம் என்ருல் நீர்

தங்கும் என்பது போல, உலகில் ஏழை பணக்காரர் இருப்பர். இஃது இயல்பு. இதனைச் சட்டத்தாலோ, படை பலத்தாலோ, பிற வகையாலோ மாற்றல் அரிது. அம்மாற்றம் ஏமாற்றமாகவே போகும். ஆகவே வள்ளுவர் நிலைபெயரா - இம்மியும் பிசகா நன்னெறி கூறினர். அது யாது? கொள்கை மாற்றம் - மனமாற்றம். அதாவது செல்வனே உவந்து தானகவே சோசலிச மனக்கருத்தோடு உதவுதல். இதனையே காந்தியடிகள், தர்ம கர்த்தா முறை என்றார். கீழ்க்காணும் குறட் கருத்துக்களை உற்று நோக்குக.

1) ''ஈத்துவக்கும் இன்பம் அறியார் கொல்''– (குறள் 228)
2) 'வசையொழிய வாழ்வாரே வாழ்வார்,
   இசையொழிய
   வாழ்வாரே வாழா தவர்'– (குறள் 240)
3) 'ஈதல் இசைபட வாழ்தல்'– (குறள்-231)
4) 'ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம் பேரறிவாளர்'
   (குறள்-215)
5) பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
   நயனுடை யான்கண் படின்'' (குறள்216)

இவ்விடங்களில், ஒருவரிடம் பொருள் குவிகிற இயல்பை உடன்பட்டு, மேலே ஒன்று கூறுகிறார். அச் செல்வம் ஒருவரே துய்க்கத்தக்கதாக இருத்தல் வேண்டா. அப்படிச் செய்தால் அதை இழக்க நேரும் எனத் தெளிவு படுத்துகிறார்.

''ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாம்உடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்'' (குறள்-228)

வள்ளுவர் காலத்தில் இவ்வமைப்பு இருந்தது எனவும் அவர் சோசலிச மனப்பான்மையில் அறத்தை வலியுறுத்தினர் எனவும் நாம் அறிகிறோம்.

இந்த மனத்திருத்தமே வெற்றி வழி. பிறவழி வெற்று வழி. காகிதக் கோட்டை போல பிற நெறிகள் ஒவ்வொரு காலத்தில் வீழ்ந்து விடும்.

இனி, வள்ளுவரது சமய நெறியில் முக்கிய மானவை யாவை? எனக்காணல் வேண்டும். உலகம், உயிர், இறைவன் ஆகிய முப்பொருள் பற்றிய கொள்கை அவர்க்கு உடன்பாடே. முதற் குறளே அதனைக்காட்டும். தீவினை, நல்வினை, மறுபிறவி, மேலுலகம் என்பன பற்றி அவர் கூறியுள்ளார். துன்ப நீக்கத்திற்கு வழி,பிறவி நீக்கம். பிறவி நீங்க மெய்யுணர்வு வேண்டும். அதாவது அவா நீக்கல் வேண்டும்

"அவாஎன்ப எல்லா உயிர்க்குமஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து" -(குறள் 361)

மெய்யுணர்வாவது —காமம், வெகுளி, மயக்கம் விடுதல் (குறள் 360)இவை நீங்க, உலகப்பொருள் களில் பற்று நீங்க வேண்டும்.

"வேண்டாமை அன்னவிழுச் செல்வம் ஈண்டில்லை
ஆண்டும் அஃதொப்பது இல்" (குறள் 363)

என்றார். இங்ஙனம் பற்று நீக்கம் வந்துறின், பற்றற்றான்-அதாவது இறைவன் பற்று தானே மேவும். அது மேவினால், மனக்கவலை மாற்றலெளிது இன்னும் பிறவிப் பெருங்கடல் நீந்தலாம் இதுவே "பேரா இயற்கையாகும்"("குறள்-370) சமய நெறியில் திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே மிக நுட்பமாக, விரிவாக விளக்கியுள்ளார், ஆனால் உலகப்பொது நோக்கில் அதனைக் கூறினார்.

முடிவுரை..

திருக்குறளில் எந்தச் சமயக் கடவுள் பெயரும் இல்லை. எந்த மொழிப்பெயரும் நாட்டுப் பெயரும் இல்லை. அரசர் பெயரும் இல்லை. கோட்பாடுகள் (Philosophy) மட்டுமே உண்டு. ஏன் இப்படிச் செய்தார்? அஃது உலகப் பொதுமையாக விளங்கிக் காலங்கடந்த, நாடு கடந்த, மொழி கடந்த கற்பக மலராக எஞ்ஞான்றும் மணம் வீசிப் பொதுநலம் விளையச் செய்ய வேண்டும் எனத் திருவள்ளுவர் கருதினார்; நூல் செய்தார். ஆகவேதான் திருக்குறள் நெறி, உலகத்தார் உள்ளத்து எல்லாம் உறைந்து ஒளி வீசுகிறது; காந்தமாய் நம்மைக் கவர்ந்து கண்ணொளி தருகிறது.

---

# 5. திருக்குறளும் அகத்துறையும்

முப்பால் மொழிந்த திருவள்ளுவர் காமத்துப் பால் என்ற இறுதிப்பாலில், காதலர் வாழ்வின் ஏற்றத்தையும், ஏக்கத்தையும் நயம்படவும் திறம் படவும் விரித்துரைத்துள்ளார். அகத்துறையில் வள்ளுவர் கையாளும் பழமை புதுமைகள் யாவை என ஈண்டுச் சிந்திக்கலாம்.

''காமத்துப்பால்'' என்ற குறியீடு வள்ளுவரே தந்ததா? 'தகையணங்குறுத்தல்' முதல் 'ஊடல் உவகை' ஈருக வரும் அதிகாரப் பெயர்களை அவரே இட்டாரா? காமத்துப்பாலை இறுதியில் வைப்பானேன்?

காமம் என்பது வடசொல் என்றும், காமத்துப் பால் என்ற தலைப்பைத் திருவள்ளுவர் வழங்கார் என்றும் சிலர் கருதுவர். திருவள்ளுவரே காமம் என்ற சொல்லை முப்பத்தொன்பது இடங்களில் ஆண்டுள்ளார். காமம் என்ற சொல்லை வேராகக் கொண்டுவரும் சொற்கள்,பதினெட்டுக் குறள்களில் உள்ளன. ஆண் பெண்ணின் இன்ப அன்பைச் சுட்டும் பொருளிலும், விருப்பம் என்ற பொதுப் பொருளிலும் திருவள்ளுவர் இச்சொல்லை ஆண்டுள் ளார். (குறள் 605; 1090). தொல்காப்பியர் காலத்தி-லும், சங்க இலக்கியக் காலத்திலும், திருவள்ளுவர் காலத்திலும் 'காமம்' என்ற சொல் இழிந்த

பொருளில் வழங்கவில்லை. மாருக, உயிர் அன்பை-இன்பப் பேரன்பைச் சுட்டியது. 'காமக் கூட்டம் காணுங்காலை'எனவும்,'காமம் சாலா இளமையோள் வயின்' எனவும், தொல்காப்பியமும், 'உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே' எனக் குறுந்தொகையும், 'காமம் வெளிப்படுந்தோறும் இனிது' எனக்குறளும் மொழியும் இத்தொடர்களால் அவ்வுயர் பொருள் நன்கு விளங்கும். 'கமம்' நிறைந்து இயலும்' என்பது தொல்காப்பியம். இவ்வடிப்படையில் கமம் காமம் ஆயிற்று. ஆகவே இது வடசொல் அன்று காமம் என்ற சொல்லைத் திருவள்ளுவரே ஐம்பதிற்கு மேலும் பயன்படுத்தினர் என்ற பின் 'காமத்துப் பால்' எனப் பெயரிட்டார் என்பதில் தடை என்ன?

திருவள்ளுவர் ஒரு சொல்லாலோ, இரு சொற்களாலோ அதிகாரத் தலைப்புக்களை அமைக்கின்ருர். 'யாரோ ஒருவர் அதிகாரங்களை அமைத்தார்' என்பாரின் கூற்றுப் பொருந்தாது. அதிகாரத் தலைப்பில் காணலாகும் இருசொல்லில் ஒரு சொல்லையேனும் திருவள்ளுவர் திருக்குறளிலேயே வைத்துள்ளார். அதுவும் முதற்குறளிலே இருக்கும். அல்லது பத்துக்குறளில் எங்கேனும் ஓரிடத்தில் காணப்பெறும். குறள்யாப்பு இடந்தரவில்லையாயின், அதிகாரச் சொல்லை மாற்றுச் சொல்லால் குறிப்பர். மிகச்சில போதே அதிகாரத் தலைப்பு குறட்கண் காணுமாறில்லை. காமத்துப்பால் இருபத்தைந்து அதிகாரங்களில், பதினெட்டு அதிகாரப் பெயர்கள் குறட்கண்ணே வருகின்றன.

ஒரு அதிகாரத் தலைப்பு மட்டும் மாற்றுச் சொல்லால் சுட்டப்படுகின்றது. 'புணர்ச்சி விதும்பல்' - இங்குப் புணர்ச்சி என்ற சொல்லுக்கு ஈடாகக் கூடல், புல்லல் என்ற சொல்லை ஆளுகின்றார்.

காமத்துப்பால் இறுதிப்பாலாகியது ஏன்? அறஞ்சுட்டி உலகை நெறிப்படுத்துவதே திருவள்ளுவரின் உட்கிடக்கை. குருதி ஓட்டம் போல இவ்வறம் முப்பாலிலும் ஊறிவருவதைக் காணலாம். வாழ்க்கைத் துணை நலம், மக்கட்பேறு, என்ற அதிகாரங்கள் குடும்பத் தொடர்பாக இருந்தும், காமத்துப்பாலில் இடம்பெறாமல், அறத்துப்பாலில் இடங்கொண்டன. பெண்வழிச் சேறல், வரைவின் மகளிர் என்ற இவ்வதிகாரங்களும் பொருட்பாலில் வைக்கப் பெற்றன. இங்ஙனம் ஓரிடத்து வரத்தகும் குடும்ப அறங்கள் வேறு பால்களில் இடம் பெற்றன. ஆதலின், அறமே திருவள்ளுவரின் மூச்சு என்று அறிகின்றோம். உலகப் பேரறங்களை அறத்துப்பாலிலும், சமுதாய அறங்களைப் பொருட்பாலிலும், தன் மக்களின் இன்ப அறத்தைக் காமத்துப்பாலிலும் வரைந்தார். தமிழ் மக்களுக்கே உரிய களவு கற்பு வாழ்வை விளம்பும் சிறப்பு நோக்கி இறுதியடைவு பெற்றதாகவும் கொள்ளலாம். "இன்பமும், பொருளும், அறனும் என்றாங்கு அன்பொடு புணர்ந்த ஐந்திணை," என்ற தொல்காப்பியர் கூர்தல் அறத்தைத் திருவள்ளுவர் புரட்சியாகத் தலைகீழ் மாற்றியது அறப்பற்றால் எனலாம்.

## II

**காமத்துப்பாலும், உரையாசிரியர்களும்:-**

காமத்துப்பால் இயல் அமைப்பில் உரையாசிரியர்கள் பலவாறு வேறுபடுகின்றனர்.

1. பரிமேலழகர் - களவு, கற்பு எனப் பிரித்தார்.
2. பரிப்பெருமாள் - அருமையிற்கூடல், பிரிந்து கூடல், ஊடிக்கூடல் என மூன்றாக்கினார்.
3. காளிங்கர் ஆண்பாலியல், பெண்பாலியல், இருபாலியல் என மூன்றாக வகுத்தார்.
4. திருவள்ளுவ மாலையில் வரும் மோசிகீரனார் பாடலும் காளிங்கர் கருத்தை ஒட்டியதே.
5. மணக்குடவரோ குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என ஐந்திணைக்கும் ஒவ்வொன்றிலும் ஐந்து ஐந்து அதிகாரங்களாக இருபத்தைந்து அதிகாரங்கள் உள என்றார்.

இவர்கள் தம் கூற்றில் உண்மையும் உண்டு-மறுதலையாக மயங்கிய நிலையும் உண்டு.

பரிமேலழகர் காட்டும் பிரிவே, கண்ணுக்கு ஏற்ற கண்ணாடி போல் பொருந்திக் காண்கிறது. பரிப்பெருமாளின் பிரிவு, வடமொழி மரபை ஒட்டியது. காளிங்கர் கூற்று உண்மையானதே ! இது கூற்றுவகையால் பொருந்தினும் இயலாகப் பிரிக்கும் ஏற்றம் இல்லாதது. மோசிகீரனார் கூற்றோ கணக்கு வகையால் பிழைபாடு உடையது. அவர் ஆண்பாற் கூற்று ஏழுவகை எனவும், பெண்பாற் கூற்று பன்னிரண்டு எனவும், இருபாற் கூற்று ஆறு எனவும் கணக்கிட்டார். இது பிழைபாடுடையது.

மணக்குடவர் கூற்றோ பெரும்பகுதி சரியில்லை. திணைக்கு அவ்வைந்து அதிகாரங்கள் குறளில் இல்லை. ஆயினும், ஐந்திணைக்கும் உரிய உரிப் பொருள்கள் ஆங்காங்கே நெற்களத்தே சிதறல் போல் சிதறுண்டு கிடக்கின்றன.

பரிமேலழகர் களவு, கற்பு எனப்பழைய மரபுப் படிப்பிரித்து உரைவகுத்தாலும், வடமொழிப் பெருங்கல் தடுக்கி ஆங்காங்கே இடறிவிழுகின்றார். காமத்துப்பாலின் பாயிர உரையில், "இது புணர்ச்சி பிரிவென இருவகைப்படும். ஏனை இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவோ எனின் இவர் பொருட் பாகுபாட்டினை அறம், பொருள், இன்பமென வடநூல் வழக்குப்பற்றி ஓதுதலான் அவ்வாறே அவற்றைப் பிரிவின் கண் அடக்கினா ரென்க" என உரைத்தார். இஃது அடிப்படையில் முரண் இல்லையா? திருவள்ளுவர் பிரிவாற்றாமையை ஓர் அதிகாரப்படுத்தினார். இதனைப் போல் படர் மெலிந்து இரங்கல், பொழுது கண்டு இரங்கல், என்ற அதிகாரங்கள் இரங்கல் ஒழுக்கத்தைத் தனித்து நின்று உணர்த்தவில்லையா? இங்ஙனமே புலவி நுணுக்கம், ஊடல்உவகை முதலானவை ஊடல் ஒழுக்கத்தைக் காட்டவில்லையா? திருவள்ளுவர் இருத்தலாகிய முல்லை ஒழுக்கத்தை யாண்டும் கூறவில்லையோ?

"மற்றியான் என்னுளேன் மன்னோ அவரொடுயான்
உற்றநாள் உள்ள உளேன்" (குறள் 1206)

இஃது இருத்தல் ஒழுக்கம் ஆகாதா? மற்றும் பசப்புறுபருவரல், தனிப்படர் மிகுதி, நினைந்தவர்

புலம்பல் ஆகிய அதிகாரப் பொருளும் இருத்தலாகிய முல்லை பற்றியதே என்க.

பிரிவு என்பது இல்லையாயின் இருத்தல், இரங்கல், ஊடல் இல்லையன்றோ? பிரிவுத்திணை யில்தான், காதலர் ஒருவர் இன்றியமையாமையை மற்றவர் நன்கு உணர்வர். உணர்ச்சிக்களமான இத்திணையே பல புலவரின் பாடு பொருளுமாயிற்று. ஆகவே தான் தமிழிலும் பாலைத்திணைப் பாடல்கள் மிகுந்தன. திருவள்ளுவரும் பிரிவுத்திணை பற்றி 12 அதிகாரங்களில் விரித்துரைத்தார். இப்பொதுமைப் பெருஞ்சிறப்பைப் பரிமேலழகர் மறந்து திருவள்ளுவர் வடமொழி மரபு பற்றிக் கூறினர் என மயங்கினர். தமிழர்க்கோ-இருத்தல், இரங்கல், ஊடல் ஆகியவை தனி ஒழுக்கங்களாகும். 'நடுவண் ஐந்திணை' எனவும், 'அன்பொடு புணர்ந்த ஐந்திணை' எனவும் தொகை கொடுத்துத் தொல்காப்பியர் விளக்குவது ஏன்? ஆகவே இவற்றைப் பிரிவில் அடக்குவது பிழை. ஆயினும், பரிமேலழகர் திருவள்ளுவரின் தனித்தன்மையையும் உணர்கின்றார். 'தமிழ்நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவு என்றும், கற்பு என்றும் பெரும்பான்மை பற்றி வகுத்து' என உரைத்தார். இதனைக் கண்ட பின்னரே நம் மனம் குளிர்கின்றது.

இவரைப் போலவே பரிப்பெருமாள், மணக்குடவர் ஆகியோரும் வடமொழிப் பற்றால் மாறு கொள்ளக் கூறிய இடங்களும் உண்டு. இவர்கள் இங்ஙனம் மயங்கத் திருவள்ளுவமாலையும்

ஒரு காரணமாகலாம். 'நான்மறையின் மெய்ப் பொருளை,' 'வேதப் பொருளாய் மிக விளங்கி' என்றவாறு ஒன்பதுக்கும் மேற்பட்ட பாக்கள் வேதத்தையும், வேத மரபுகளையும் திருவள்ளுவர் சொன்னார் எனக் கூறுதலால் உரையாசிரியர்கள் தடம் புரண்டனர். திருவள்ளுவமாலை கி. பி. 12ஆம் நூற்றாண்டை ஒட்டிய பிற்கால நூல் என்பது டாக்டர். தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் கருத்து. ஆதலின் அந்நூல் கூறும் செய்திகள் திருவள்ளுவர் கருத்தாகக் கொள்ளுதற்கில்லை.

III

**அகத்துறையில் வள்ளுவரின் பழமை-புதுமை:-**

தொல்காப்பியர் கண்ட பிரிவுப்படியே திருவள்ளுவர் களவு கற்பு என அமைத்துக் கொண்டார். ஆயின், துறை அமைப்பில் புதுமை கண்டார். காட்சி, ஐயம், துணிவு ஆகிய மூன்றையும் விடுத்துத் 'தகையணங்குறுத்தல்' எனத் தொல்காப்பியர் கூறாத தொடரில் கூறினார். இதனுள் மேற்சொன்ன மூன்றையும் அடக்கினார். கோவை நூல்களில் வரும் 'தகையணங்குறுத்தல்' திருவள்ளுவர் பேசும் அதிகாரப் பொருளினின்றும் பெரிதும் மாறுபட்டது. "குறிப்பு அறிதலை"த் தனியாகப் பிரித்தார்.

குறிப்பறிதல், நலம் புனைந்துரைத்தல், நாணுத் துறவுரைத்தல், அலர் அறிவுறுத்தல் ஆகிய நான்கும் தொல்காப்பியர் கண்டவை. திருவள்ளுவர் நலம் புனைந்துரைத்தல் என்ற துறை செய்த

பின்னர், காதற்சிறப்புரைத்தல் என்று மற்றுமோர் துறை செய்தார். தலைவன் தலைவியின் நலங்களைப் புகழ்தல் போலக் களவில் தலைவி, தலைவன் நலன் களையும் பாராட்டிக் கூறுவது புதுமை. இயற்பட மொழிதல் என்ற துறையில் இக்கூறு உண்டு என்றாலும் திருவள்ளுவர் பேசும் காதற் சிறப்புரைத்தல் அதனினின்றும் மாறுபட்டது.

களவு ஒழுக்கத்தில் தலைவி பேசும் பேச்சுக் களைத் தொகுத்த தொல்காப்பியர், அலர் பற்றித் தலைவி பேசுவாள் என்பதைச் சுட்டவில்லை. சங்க இலக்கியங்களில் ஊரார் பேச்சாகிய அலர் தூற்றுவது பற்றித் தலைவியும், தோழியும் தம்முள் கூறிக் கொள்கின்றனர். செவிலியும் இது பற்றிப் பேசுகின்றாள். ஆனால் அலர்பரவுவது பற்றித் தலைவனே எடுத்துப் பேசி வரவேற்றதாக இல்லை. திருவள்ளுவத் தலைவன் தானே அலரை விரும்பி வரவேற்கிறான். (குறள் 1141—1145). இது புதுமை. 'புணர்ச்சி மகிழ்தல்' என்ற அதிகாரமும், பாடும் பொருளும் புத்தம் புதியவை.

கற்பில் தலைவி பேச்சுக்களைத் தொல்காப்பியர் தொகுக்குங்கால் கூறாது விடுத்த கூற்றுக்களை இங்குத் திருவள்ளுவர் புதிதாகப் புனைகின்றார். கனவு நிலையுரைத்தல், பொழுது கண்டு இரங்கல், அவர்வயின் விதும்பல், நெஞ்சொடு புலத்தல் முதலியவை இத்தகையன. ஆயினும், தொல் காப்பியர் இத்துறைகளை மெய்ப்பாட்டியலிலும் பிற இடத்தும் கூறியுள்ளார். கற்பியலில் வள்ளுவத்

தலைவி பேசும் பேச்சு மிகப் பெரும்பாலும் மெய்ப்பாட்டியலில் வருவனவாம்.

கற்பியலில் வரும் கண் விதுப்பழிதல், புணர்ச்சி விதும்பல் முதலியன திருவள்ளுவர் இயற்றிய புதிய துறைகளாகும் தலைவனும், தலைவியும் புலவி செய்தற்குரிய இடங்களைப் பற்றித் தொல்காப்பியர் கூறியுள்ளார். சங்க இலக்கியங்களிலும் புலவிக்குப் பரத்தையர் முதன்மைக் காரணமாகக் காட்டப் படுகின்றனர். ஆயின், திருவள்ளுவர் தான் புலவியை மிகச் சிறப்பாக மாசில்லா அற இன்பமாக ஆக்கினர். புலவிக்குப் பரத்தையரைக் காரண மாய்ச் சுட்டிஞரில்லை. இது புதுமை. புலவி, புலவி நுணுக்கம், ஊடல் உவகை என மூன்று அதிகாரங் களில் விரிவாக விளம்பினர். புலவிக்கு விளக்கமே இங்கு தான் பெறுகிறோம். இங்கு இலக்கிய நயப்பொலிவும் மிகுதி. இவற்றை டாக்டர். வ சுப. மாணிக்கனர் போன்ற அறிஞர்கள் மிகவும் பாராட்டியுள்ளனர்.

திருவள்ளுவர் அதிகார அடைவில் ஒழுங்கு முறையும் உண்டு. கோவைகள் போலக் கதைத் தொடர்புகளைத் திருவள்ளுவர் பேசவரவில்லை. ஆயினும் காதலர் எய்தும் அநுபவங்களின் படிப்படியான தொடர் அடைவுகள் உண்டு. இங்குக் கோவைத் தன்மை இருப்பதை நாம் காண்கின்றோம்.

## IV

திருவள்ளுவர் அகத்திணையின் உயிரோட் டங்களை எல்லாம் காமத்துப்பாலில் காட்டியுள்ளார்.

சங்க நூற்பரப்பில் காணப்படும் அகத்திணைச் செய்திகளை இருபத்தைந்து அதிகாரத்துள் பொதிந்து வைத்துச் சத்தூட்ட மாத்திரை போல் வழங்கியுள்ளார். இவ்வதிகாரங்களைப் படித்தாலே காதற்கல்வியை முற்றும் பெற்றவராவோம்.

திருவள்ளுவர், இரண்டு அடிகளில் அகத்திணை மாந்தரைப் பேச வைத்துள்ளமையால், கருப் பொருளையோ உள்ளுறைஉவமங்களையோ கையாள வாய்ப்பில்லை. ஆயினும் "ஏனை உவமத்தை" ஆளத்தவறவில்லை. காமத்துப்பாலில் மட்டும் ஐம்பத்தொரு உவமைகளைத் தந்துள்ளார்.

திருவள்ளுவர் காமத்துப்பாலில், வீட்டுலக வாழ்வைச் சமய நோக்கில் குறித்துள்ளார் என உள்ளுறை காண்பாரும் உளர். இங்குக் காண் பாரின் சமயப்பேரறிவும், இலக்கியப்பரப்பும் அறியப் பட்டாலும், அது திருவள்ளுவ நெஞ்சிற்கு ஏற்றதன்று; ஒன்பதாம் நூற்றுண்டுச் சமய நோக்கு களையும், போக்குகளையும் ஈராயிரம் ஆண்டுப் பழமை மிக்க திருவள்ளுவர் நூலில் ஏற்றிக் காண்பது, 'ஆசைபற்றி அறைவதாகுமே' தவிர இலக்கிய நெறியாகாது. காலப்பழமையைக் கருத்தில் கொண்டு முன்னும், பின்னும் பயில்வதே படிக்கும் முறையாகும். இம்முறையில் 'சிந்தைக் கினிய, செவிக்கினிய, வாய்க்கினிய, திருவள்ளுவர் செய் அகத்துறைகளைக் கற்பது அறிவிற்கு ஆக்கமாகும்.

# 6. மகளிர் விளையாடல்கள்

மக்கள் வாழ்க்கையில் ஓர் உட்கோளைக் கொண்டு முன்னேக்கி நடக்கும் போது, இன்பம் துன்பம் என்ற இவ்விரண்டிற்கும் ஆட்படு கின்றனர். வாழ்க்கைப் பாதையின் ஒவ்வொரு முன்னேற்றத்திலும் யாதானும் தடையிருத்தல் இயல்பு. அவ்வாறு தடை கண்டால் சற்றே தயங் குவதும், பின் மாற்றம் காண விழைவதும் இயற்கை. மாற்றம் காண, விளையாட்டுக்கள் உதவுதல் கூடும் விளையாட்டு, மனத்தை வேறுவழியில் ஈர்த்துச் சென்று மகிழ்ச்சியூட்டி உளச்சோர்வை உடன் நீக்கும் இயல்பிற்று. முன்னுளில் மகளிர் ஆடிய ஆடல்களைப் பற்றி இனிக் காணலாம்.

பண்டைக் காலத்துக் கெண்டை விழியார் ஆடல் யாவும், அரும்பெரும் பொருளோடு அமைந் தவை. உடற்கட்டைப் பெருக்கி ஒப்பற்ற அழகைத் தப்பாமற் கூட்டுவன. உளத்துணர்ச்சியைக் காட்டி ஒள்ளிய பொழுதுபோக்காகவும் இருந்தன. கால மென்னும் கொடுங்கூளி வாய்ப்பட்டோ, காத்து நிற்கும் திறமற்ற நிலைமையாலோ, ஓலமிட்டு அரற்றுமாறு ஒவ்வொன்ருய் வழக்கொழிந்து வர லாயிற்று. அவற்றின் அடிச்சுவடு மட்டும் அங் கொன்றும், இங்கொன்றுமாய் இன்று காணப்படு கின்றது.

**விளையாட்டும், பயிற்சியும்**

சிறுவீடு கட்டல், சோறு சமைத்தல், பாவை யாடல் முதலியன, மகளிர் பின்னர் பெறப்போகும் வளர்ச்சிக்கு-தாய்மை உணர்ச்சிக்குமுன் கூட்டியே பெறும் பயிற்சியாயின. இவற்றில் தேர்ச்சி உறுவார் நல்ல கொழுநரைக் கருத்தாலும் காரியத்தாலும் கவர்வாராயினர்.

> " முற்றிழை ஏஎர் மடநல்லாய் நீயாடுஞ்
> சிற்றில் புனைகோ சிறிது ! என்றான்" — (கலி. 111)

என்பதால் சிறுவீடு கட்டுதல் பற்றியும்,

> " -- ... வல்சி புகட்டி வடித்தெடுத்து வயன்மா
> மகளிர் குழாஞ் சிறுசோ றுக்கும் பெருந்தண் பணைமதுரை
> (மீனாட்சி பிள்ளைத்தமிழ் 24)

என்பதால் சோறு அட்டு விளையாடல் பற்றியும்,

> " உரு வறுமுலை மடாஅ
> உண்ணுப் பாவையை ஊட்டுவோளே" (ஐங். 128)

என்பதால் பாவை விளையாட்டுப் பற்றியும் அறியப் படும். இவை ஈரிடத்து விளையாடல்கள் (In and out door games).

நண்டு ஆட்டுதல், வண்டல் அயர்தல், மண் எடுத்தல் ஆகியவை கொண்டு அக்கால அணங்குகள் ஆறு, கடல், நோக்கிச் சென்றனர் என்பதும் அலவன் ஆட்டிக் களித்தமையும், புனல் குடைந்து நீருள் மூழ்கி அடிமண்ணை எடுத்து வந்து மகிழ்ந்தமையும் அறியப்படும். ஆகவே அவர்கள் நன்கு நீந்தப் பயின்றிருந்தனர் என்பதும் வெளிப்படை. இவை

"செக்கர் ஞெண்டின் குண்டளை கெண்டி
...........................................................
...........................................................
கொண்டல் இடுமணல் குரவை முனையின்
வெண்டலைப் புணரி ஆயமொ டாடி" (அகம்–20)

என்பதால் அறியப்படும். நொச்சி, முல்லை ஆகிய செடிகளை வளர்த்தமையும் கிள்ளை, பூவை, துள்ளும் மான், தோகை மயில் போன்றவைகளை வளர்த்தமையும் பற்றிய செய்தியினை அறிகிறோம். இதனால், அஃறிணையிடத்தும் மகளிர் காட்டும் அன்பும், பொது நோக்கும் புலனாகும். நாய், பூனை - வளர்த்தல், தோட்டம் பயிரிடல் ஆகியவற்றை மேல்நாட்டாரும் இன்று கைக்கொண்டு வருவது கருதத்தக்கது. அவர்களும் இவற்றைப் பயன் உள்ள விளையாட்டு என்றே கருதுப.

**விளையாட்டு வகைகள் :**

அம்மானை, கழங்கு, கும்மி, கோலாட்டம், சுண்ணமிடித்தல், பந்துவீசல், ஊசல் ஆகியவை கைக்கும், காலிற்கும், குரலுக்கும் பயிற்சி தருவன.

அஞ்சாமல் மலைஉச்சி சென்று 'நரம்பொடு வீணை நாவின் நவின்றதோ' என்னுமாறு நன்மொழி பேசி மகிழ்தலைச் 'சிலம்பு எதிர் கூவல்' என்பர். இதனால் குரலுக்கு இனிமை வாய்க்கப் பயிற்சியும், அச்சம் நீக்க வழியும் ஏற்பட்டன. இதுவும் ஒரு வகை விளையாட்டே.

தாயம், பல்லாங்குழி ஆகியவை சிந்தனையையும், நினைவு ஆற்றலையும் பெருக்கவல்ல

ஆட்டங்களாகும். இவை மனை விளையாடல்களாம் (Indoor games).

**சமயநூலில் விளையாட்டுக்கள் :**

இவை தவிர திருவெம்பாவை, திருத்தெள் ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திரு உந்தியார், திருத்தோள் நோக்கம் ஆகியவை மகளிருக்குரிய விளையாட்டாகத் திருவாசகம் போன்ற தெய்வப் பனுவலால் அறியலாம். இன்று அறிய முடியாத 'ஓரை' என்ற ஒரு விளையாட்டுப் பிற இலக்கியத்தில் சுட்டப்படுகின்றது.

இவ்வாறு கால்நூறுக்கும் மேற்பட்ட பல விளையாட்டுக்களைப் பைந்தொடியார் ஆடினர் எனப் பழைய இலக்கியத்தின் வாயிலாகத் தெரி கிறோம். விடுபட்டவையும், குறிப்பின்றிப் போயின வும் எத்துணையோ ?

அம்மானை என்பது ஒரு விளையாட்டு. மூன்று பெண்டிர் ஒன்றாய் அமர்ந்து மூன்று காய்களை வைத்து ஆடுவர். இரண்டு கையிலும் இரண்டு காய் இருக்க, ஒரு காய் மேல் நோக்கி வீசப் பெறும். சென்ற அது மீண்டும் கரம் வரும் நேரத்தில் திரும்பவும் மற்றொரு காய் மேலே செலுத்தப்படும். இது மாறிமாறிக் கத்தி, பந்தம் முதலியன விளையாட்டு அரங்கில் வீசப் படுவது போல் ஆடுதலாம். இங்ஙனம் ஆடும் போது ஒரு நங்கை யாதானும் ஒன்று வினவ, மற்றொருத்தி விடை யிறுக்க, இன்னொருத்தி காரணம் கூற இந்த வகையில் இசையும் உடன்

சேரும். மாணிக்கம், மரகதம், முத்து ஆகிய மணிகளும் அன்று காய்களாகப் பயன்படுத்தப்பட்டன என்பதால் செல்வ வளமும், இலக்கிய மரபும் தெரிகின்றன, பிற்காலத்தில் பலுவில்லா மரத்தால் இவ்விளையாட்டுக் காய்கள் செய்யப்பட்டன என்றும் அறிகிறோம். மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் மாணிக்கம் முதலான மணிகளைத் தத்துவக் கருத்தோடு இயைத்துக் காட்டியிருப்பது சுவை மிக்க பகுதியாகும்.

**அம்மானை :**

'அம்மானைவரி' என்று சிலப்பதிகாரத்தில்தான் முதன் முறையாகக் காணுகிறோம் பாட்டு-தொகை நூல்களில் இவ்விளையாட்டுப் பற்றிய குறிப்பு இல்லை.

**" கடவரைகள் ஓர்எட்டுங் கண்ணிமையா காண**
**வடவரைமேல் வாள்வேங்கை ஒற்றினன்யார் அம்மானை ?**
**வடவரைமேல் வாள்வேங்கை ஒற்றினன்திக் கெட்டும்**
**குடைநிழலிற் கொண்டுஅளித்த கொற்றவன்காண் அம்மானை**
**கொற்றவன்தன் பூம்புகார் பாடேலோர் அம்மானை."**

(சிலம்பு —வாழ்த்து)

இதுவே பழமையான விளையாட்டு. சிந்தாமணியும் பதுமை என்றபெண் அம்மானை ஆடியது பற்றிக் கூறுகிறது. பிற்காலத்தில் பெண்பாற் பிள்ளைத் தமிழில் ஓர் உறுப்பாய் அம்மானை அமைந்தது. பிறகு பிரிந்து ஒரு தனிப் பிரபந்தமாகவே வளர்ந்து விட்டது.

**கழங்கு :**

'கழங்கு' என்பது இது போன்ற விளையாட்டே அகம், கலி போன்ற பாடல்களில் இவ்வாடலே

மிகுதியாய்ச் சுட்டப்படுகிறது. இதுவே பின்னர் அம்மானையாக வளர்ந்ததோ எனக் கருத இடமுண்டு. அம்மானைக்கும், கழங்கிற்கும் மிகுந்த வேறுபாடு இருப்பதாகத் தெரியவில்லை. ஆயின் சிந்தாமணியில் பதுமை என்றவள் கழங்கும், அம்மானையும் ஆடினுள் என்று வருகிறது. ஆகவே இரண்டும் வேறு வேறு என்று தெரிகிறது. அப்படியாயின் 'கழங்கு' எப்படி வேறுபடுகிறது? என்று பார்க்க வேண்டும். கழற்சிக் காயைக் கொண்டு ஆடுவது 'கழங்கு' என்பர் (கழற்சிக்காய் என்பது ஒரு வித்து) தரையில் பலகாய்களை எதிரில் வைத்து விட்டு ஒன்றை மேல் நோக்கி வீசி அது கரம் பொருதும் போது புறங் கையால் அக்காயைத் தாங்கித் தரையில் உள்ள காய்களை அள்ளல் வேண்டும். இது இன்றும் வழக்கில் இருக்கிறது. இதுவோ அந்த ஆட்டம் என்று தோன்றுகிறது. கழங்கு, குறிவைத்துப் பார்க்கவும் பயன்பட்டது.

" கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும் "
—என்பது தொல்காப்பியம் (களவு 25)

" இளந்துணை யாயமொடு கழங்குட ஞடினும் "
என்பது (அகம் 17)

பட்டு, நெட்டி, பஞ்சு இவை கொண்டு பந்து செய்தனர். அவை உந்தி அடிக்கும் போது எழும் இயல்பின. துடியிடைப் பிடிநடைப் பேதையர் பின்னும் முன்னும் எங்கும் பெயர்ந்து மின்னல் வேகத்தில் பந்தடித்து விளையாடினர். பந்து மண்ணிலா - விண்ணிலா - மரைபுரையும் கரத்திலா எனக் கண்டார் மயங்கும் வண்ணம்

வேகமாக விசையாக அடித்தனர். சிலம்பில் கந்துகம் என்று இது குறிக்கப்படுகின்றது. (கந்துகம்-பந்து). விமலை, 'மாலைசூழ் வண்டுபோல் பந்தை எல்லாவிடத்தும் செலுத்தினுள்' என்று சிந்தாமணி செப்பும். இவ்வாறு அடிக்கும் போது வியக்கத்தக்க வேடிக்கைகள் செய்தனர் என்றும் அறிகிறோம் பெருங்கதையில் இதுபற்றிய பலகுறிப்புக்கள் உண்டு.

**ஊசல் :**

"ஊசல்" பழங்காலத்து விளையாட்டு. தமிழகத்தில் இது மிகுதியும் வழக்கில் இருந்த விளையாடல். "ஞாழல் ஓங்குசினைத் தொடுத்த கொடுங்கழித் தாழை வீழ்கயிற் றூசல் தூங்கி" (அகம் 20) விளையாடுதலில் பெண்டிருக்குப் பெரிதும் விருப்பம் உண்டு.

> **"சீரார் பவளக்கால் முத்தங் கயிறாக**
> **ஏராரும் பொற்பலகை ஏறி இனிதமர்ந்து"**

ஆடும் செல்வச் சேயிழையரும் இருந்தனர், இந்த ஊசல் இரண்டு காதல் உள்ளங்களை இணைக்க உதவியது; கட்டிளங்காளை யொருவன் பலநாள் தினைப்புனம் வந்தான். தையல் ஒருத்தியைக் கண்டான். மையல் கொண்டான். ஆனுல் அவன் மனம் விட்டுச் சொல்லவில்லை. நாணத்தால் நங்கையும் பேசினுளில்லை. இருவரும் உணவு செல்லாமல், உறக்கம் கொள்ளாமல் துயரத்தால் சாம்பினர். அவள் நாணில செய்ய நயந்தாள். அவன் வழக்கம் போல் வந்தான். வாய்ப்பைப்

பயன்படுத்தக் கருதியவள் 'ஐய! சிறிது ஊசல் ஆட்டுக' என்றாள். அவனும் ஒப்பி ஆட்டினான். பொய்யாக அவன் மார்பில் அவள் தவறி விழுந்தது போல் விழுந்தாள். அவனோ உண்மையை ஓராது இயல்பாய் நிகழ்ந்ததாய் எண்ணி மாலுற்றான். அவளோ, மயக்கம் தெளியாதாள் போல் வறிதே இருந்தாள். மெய் சோராவிட்டாலும்,மதி சோர்ந்தே இருந்தது. அந்த வகையில் அவள் பெரிய கள்ளியே. இவ்வாறு நாட்டம் இரண்டும் கூட்டி உரைக்க அன்பு புலப்பட்டது. ஒருநாள் சங்கம் ஆர்க்கப் பறை முழங்க வதுவைச் சடங்கும் நடந்தது. இது ஊசல் செய்த உதவியன்றோ! இந்த அகக்காட்சியை புலவர் வாய்மொழியால் காணலாமா?

"ஐய! சிறிது என்னை' ஊக்கி எனக் கூறத்
தையால் நன்று! என்று அவன் ஊக்கக் கை
நெகிழ்பு பொய்யாக வீழ்ந்தேன் அவன் மார்பின்
வாயாச் செத்து ஒய்யென ஆங்கே எடுத்தனன்
கொண்டாள் மேல் மெய்யறியா தேன்போற்
கிடந்தேன்மன்" (கலி-37)

ஊசல், ஆடும்போது கல்லைப் பிசைந்து கனியாக்கும் மொழியாலே பண்சுமந்த பாடல் பாடுதலுமுண்டு. கேள்வி-பதில் முறையில் பாடலிருக்கும். பின் இது தனி உறுப்பாகவே பிரபந்தத்தில் வந்துவிட்டது.

இனி, மாணிக்க வாசகர் குறிப்பிடும் மகளிர் ஆடல்களைக் காண்போம். அவர் ஒன்பது விளையாடல்களைக் குறிக்கிறார். திருவம்மானை, திருப்

பொன்னூசல் நீங்கலாக 1. திருவெம்பாவை, 2. திருப்பொற்சுண்ணம், 3. திருத்தெள்ளேணம், 4. திருச்சாழல், 5. திருப்பூவல்லி, 6. திருவுந்தியார், 7. திருத்தோள் நோக்கம் ஆகிய ஏழும் திருவாசகத்தில் கூறப்பட்டுள்ளன. ஆயின் இவையும் பண்டு விளையாட்டின் அடிப்படையில் பிறந்து சிறிது மாறி உருப் பெற்றவையே.

**திருவெம்பாவை :**

திருவெம்பாவை என்பது பல வயதுடைப் பெண்கள் ஒன்ருகத் திரண்டு தைத்திங்களில் பொழுது புலருமுன் புனலிடைப் புக்குக் 'காதார் குழையாடப் பைம்பூண் கலனுடக் கோதைகுழலாட வண்டின் குழாமாடச் சீதப்புனலாடிச்'சித்தம்குளிர, ஆடுதலாம். இவ்வாறு பாடும் போது முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளைப் பின்னைப் புதுமைக்கும் பெயர்த்தும் அப்பெற்றியனை அவ்வேல் விழியார் பாடி ஏத்துவர். "மானே! நீ நென்னலை, நாளைவந்து உங்களை நானேஎழுப்புவன் என்றலும் நாணுமே ! உறங்குதியோ ! என்றும், 'எண்ணிக் குறையில் துயிலேலோர் எம்பாவாய்' என்றும், நகைச்சுவை ததும்ப ஓரங்க நாடகம் போல மிக அருமையாக மணிவாசகர் நடத்திச் செல்கிருர். ஆயின் இங்கு ஒருதடை எழுகிறது. நீருள் ஆடும் போது பாடிஞற் பல இடையூறு விளையலாம். உயிருக்கே இறுதி பயந்து விடலாம். ஆகவே நீர் சிதறி ஒருவர் மேல் ஒருவர் தெளித்து, விளையாடல் உண்டேயன்றிப் பாடுதல் இல்லை. ஆகவே இவர் இப்படிக்காட்டல் நூல் வழக்கே

யன்றி உலக வழக்கில்லை என்று அறிக ஆண்டாள் இதே முறையில் பாடுகிறார். ஆனால் 'மார்கழியில் நீராடல்' என அவர் கூறுவார். இவை தவிர வேறு இலக்கியத்தில் 'பாடி ஆடும்' திருவெம் பாவையாகக் காட்டப்படுதலில்லை. இது பழைய புனல் விளையாட்டேயாம்

"வையெயிற்று உவர்நாப்பண் வகைப்பணிப் பொலிந்துநீ
தையினீர் ஆடிய தவந்தலைப் பாடுவாயோ" (கலி)

என்பதாலும்,

"கைதை வேலி நெய்தலுங் கானற்
பொய்தல் ஆயமொடு பூங்கொடி பொருந்தி" (சிலம்பு)

என்பதாலும் அறியலாம். பரிபாடலிலும் இதுபற்றிய குறிப்பு உண்டு இவற்றிலெல்லாம் பெண்கள் ஆறு, கடல், ஆடுதலும், தைத்திங்களில் ஆடுதலும், பாட்டுப்பாடுதல் இன்றி ஆடுதலுமே குறிக்கப்படு கின்றன. ஆகவே இந்தப் புனலாடலே 'திருவெம் பாவை' யாயிற்றுஎன்பது தேற்றம். இதுவே 'அம்பா ஆடல்' என்றும்குறிக்கப்படுகிறது. அம்பா ஆடலும், தைநீர் ஆடலும் வெவ்வேறு செயல்கள் என்றும் சிலர் கூறுவர்,

**திருபொற்சுண்ணம் :**

திருப்பொற் சுண்ணம் என்பது உரலில் யாதானும் ஒன்றை இட்டு வாள்தடம் கண்புடை பெயர, வரிவளை ஆர்ப்ப மங்கையர் உலக்கை போடுவர். அவர்கள் சோர்வு நீங்கப் பாடுதலும் உண்டு. தொழில்—இடித்தல். பயன் — பொற் சுண்ணம். பயனே பெயராயிற்று. இது முற்காலத்

தில் வள்ளைப்பாட்டு என்று வழங்கப்பட்டது. கலித்தொகையிலும் சிலம்பிலும் வள்ளைப்பாட்டு உண்டு. இவ்வாறு இடித்துப் பெற்ற சுண்ணத்தைத் திக்கெட்டும் பரவவிட்டு மிக்க களி கூர்தலும் விளையாட்டாம். குணமாலை, சுரமஞ்சரி ஆகியோரிடைப் பூசல் நேர இச்சுண்ணம் காரணமாயிற்று என்பதைச் சிந்தாமணி மூலம் அறிகிறோம் இனி வள்ளைப்பாட்டாகிய உலக்கைப் பாட்டு (பொற் சுண்ணம்) என்று வருவது விளையாட்டு ஆகுமா? மெய்வருத்தம் தோன்றாமல் இருக்கும் பொருட்டன்றோ மகளிர் பொருளை உரலிலிட்டு இடிக்கும் போது பாடுகின்றனர்? என்ற வினவை எழுப்பலாம் ஆயின் இங்கு ஓர் அருமை இருக்கிறது. குழந்தைக்குப் பாலூட்டலையும், தாலாட்டலையும், சோறு அடுதலையும், அன்னை — அக்காள் வாயிலாக அறிந்த சிறுமி, தாய்மை உணர்ச்சியோடு தன் இனப் பேதையருடன் அவற்றையே விளையாட்டில் அமைத்து விளையாடுதல் போலவே, அன்னை — அக்காள் மூலம் அறிந்து மண்ணால் — மரத்தால் உரல் செய்து சிறு குச்சியே உலக்கையாக இட்டுப் பச்சிலை முதலியவற்றைப் பொருளாகப் போட்டு இடிப்பதும் உண்டு. அப்போது விளையாட்டு ஆக வில்லையா? இதையே சிறிது உயர்வு நவிற்சியோடு இளங்கோ கூறுகிறார். சந்தன உரலில் முத்தைப் பொருளாக இட்டு யானைக் கொம்பாகிய உலக்கை கைக்கொண்டு சேரன் புகழ்பாடிக்குற்றினர் என்பார்

> "சந்துரற் பெய்து தகைசால் அணிமுத்தம்
> வஞ்சி மகளிர் குறுவரே வான்கோட்டால்"
>
> (சிலம்பு வாழ்த்து)

ஆகவே இவ்வாறு சிறுமியர் ஆடும் போது விளையாட்டாகவும், மடந்தையர் பாடும் போது மெய்வருத்தம் நீங்கவும் பாடப்பட்டது என்று கொள்ளல் வேண்டும். பிற்காலத்தில் இதை ஒரு துறையாக ஆக்கி மங்கைப் பருவத்தினர் தலைவரை எண்ணி வருந்தி வீட்டகத்தில் இருந்து அவன் இயல்பு பாடி இடித்ததாக ஆக்கியுள்ளனர். "அவன் புகழ் பாடி, தொடி உலக்கை ஓச்சப் பெறுவனோ அம்மனைக் கண்ணுள்ளேன் யான்" (நந்தி. க) என்று ஒருத்தி வருந்துகிறாள்.

**திருத்தெள்ளேணம் :**

திருத்தெள்ளேணம் என்பது பாட்டுக் கேற்பக் கைகொட்டி ஆடுதலாம் 'பாடி நாம் கொட்டோமோ' என்று வருதலால் அறியப்படும். It is a game where the sand is sifted என்பார். பெண்டிர் பறைகொட்டி ஆடியதாக இலக்கியச் சான்று இல்லை. ஆகவே இது 'கும்மி' போல ஒன்று எனலாம். கும்மியில் பாட்டுக் கேற்பக் கரங் கொட்டி ஆடல் வழக்கன்றோ? பாரதியும் 'கொங்கை குலுங்கக் கும்மியடி' என்பர். குரவைக் கூத்தின் ஒரு பிரிவே கும்மி. தெள்ளேணம் – சிறு பறையெனக் கொள்வாரும் உளர். கும்மி கொட்டியோ, சிறுபறை கொட்டியோ ஆடினர் போலும்.

**திருச்சாழல் :**

'திருச்சாழல்' என்பது வினவிடை முறையில் விளையாடும் விளையாட்டு. "பூவில் பூ என்ன பூ

வாடாப்பூ? '' "உப்பு", 'தமிழ் தந்த மலை ? எந்த மலை ? "அ ண் ணா ம லை'', இப்படி வருவது போலும் * இ வ் வா று இரத்தின நவ இரத்தினம் கூறுகிறார். அம்மானை கழங்கு இவற்றிலும் தடை எழுப்பி விடை கூறும் முறை உண்டு என்று கண்டோம். ஆகவே அவற்றிலிருந்து சிறிது மாறி இது பிரிந்து வளர்ந்து வந்தது என்று நினைக்கலாம். திருமங்கை ஆழ்வாரும் இத்துறையை வகுக்கிறார். நாட்டுப் பாடல்களாக விளங்கிய சிறு விளையாட்டுப் பாடல்களும் இலக்கிய ஏட்டில் ஏறிப் புதுமெரு கோடு சாகாவரம் பெற்றன.

**திருப்பூவல்லி :**

'திருப்பூவல்லி' என்பது பூக்கொய்து மாலை யாக்கி ஒருவருக்கொருவர் சூட்டியும், பாவை முதலியவற்றிற்கு அ ணி வி த் து ம் மகிழ்தலாம். "குணங்கூரப் பாடி நாம் பூவல்லி கொய்யாமோ'' என்பதால் ஒருபொருள் பற்றிப் பலர் பாடியது இது எனலாம். இங்கே வேதாந்தக் கருத்துக்கள் அமையப் பார்க்கிறோம். பூக் கொய்யும் போது பாடியே கொய்வர் என்று வேறு இலக்கியங்களில் காணவில்லை. இதையே அந்த நாளில் 'கொய்யும் வள்ளிப் பூ' என்றனர். இதுபற்றித் தொல்காப்பியர் குறிப்பாய்க் கூறுவர். ஆகவே இதுவும் பழைய ஆடலே.

---

* It is sung by a chorus of girls with much Clapping of hands The First two lines of verse propose to ask a question and last two lines contain the answer.

**திருவுந்தியார் :**

'திருஉந்தியார்' என்பது பந்தாட்டம் போன்ற ஒரு விளையாடலே. * இதனைத் 'தட்டாமலை' என்பர் திரு ச. தண்டபாணி தேசிகர் இதிலும் வினு-விடை முறை உண்டு. இங்கு ஒருவர் ;கூற்ருயும் கொள்ளலாம். உந்தி-உந்திச்செல்வதால் இப்பெயர் பெற்றது வினுவிடை முறை ஆசிரியர் தம் கருத்தை வெளியிட வாயிலாகக் கொண்ட நூல் வழக்கமே. ஆகவே திருமதி. இரத்தின நவஇரத்தினம் கூறுகிற படி இது பந்தாட்டத்தில் இருந்து வந்தது எனக் கொள்ளலாம்.

**திருத்தோள் நோக்கம் :**

'திருத்தோள் நோக்கம்' என்பது தோளோடு தோள் இணைந்து ஆடுதலாம். குரவை ஆடலில் கரம் சேர்த்து விலாவில் புடைத்து ஆடல் உண்டு. தோள் உராய்ந்து ஆடலும் உண்டு இது சற்று வேறுபட்டது ஆயினும் அதிலிருந்து பிறந்தது எனலாம். "This may be a kind of game where the chiidren aim at touching the shoulders of their partners" என்பர் இரத்தின, நவஇரத்தினம். இது உண்மையாயின் இன்று இருக்கும் 'கிளித் தட்டோடு' இது ஒருவாறு ஒப்பாகும் இதுவும் கேள்வி பதில் முறையில் இயற்றப் பட்டிருக்கிறது. இவ்வாறு பழைய இலக்கியத்தில் காணப்படும்

---

* "Uenthyar is supposed to mean the players at a game played in a circle where the ball is sent flying aloft"

விளையாட்டுக்களை அடியொற்றியே மணிவாசகர் தம் நூலில் மேற்கண்ட விளையாட்டுக்களைக் கூறி யிருக்கிறார்.

இற்றை நாளில் விளையாடப்படும் வளைபந்து, பூப்பந்து, எறிபந்து ஆகிய மேனாட்டார் விளையாட்டுக்கள், தமிழ் மகளிரின் பல விளையாட்டுக்களை வழக்கொழியச் செய்து விட்டன தாயம், சொக்கட்டான், பல்லாங்குழி ஆகியவை வீட்டுப் பரணியிலே இருக்க, பல புதிய ஆடல்கள் வந்து புகலாயின. நம் நாட்டு வெப்ப-தட்ப நிலைக்கும் உடல் கூறுக்கும் ஏற்றவாறு பண்டைய விளையாடல்கள் இருந்தன. உடலையும் உள்ளத்தையும் வளர்த்து உரம் செய்தன. இவை பற்றி அறிவதும், இவை அழியாமல் ஆடுவதும், நலனும் நாகரிகமும் ஆகும்.

# 7. ஆத்தி சூடிகள்

இன்று இலக்கிய உலகில் மூன்று ஆத்திசூடி வழங்குகின்றன. 1. ஔவையார் இயற்றிய ஆத்திசூடி. 2. பாரதியார் செய்த ஆத்திசூடி. 3. பாரதிதாசனுர் படைத்த ஆத்திசூடி. முன்னதற்கும் பின்னவற்றிற்கும் கால அளவில் நீண்ட இடையீடு உண்டு. ஆகவே வேறுபாடும் மாறுபாடும் மிகுந்திருக்கக் காணலாம். இம்மூன்று ஆத்திசூடி பற்றியும் கட்டுரைப்பதே இங்கு நோக்கம்.

இது யாப்பு முறையில் இலக்கிய வகையில் புதிது இடைக்கால ஔவையார் 'ஆத்திசூடி' இயற்றினுர். "ஆத்தி சூடி யமர்ந்த தேவனை" எனத் தொடங்குவதால் நூலின் முதற்சொல்லே நூற்பெயராயிற்று. நூலுக்குப் பெயரிடுதற்குரிய காரணங்களைக் கூறப்புகுந்த நன்னூல் நூற்பாவில் (544) இதற்கு விதியில்லை. "தன்மை முதல் நிமித்தத்தினும் என்ற பகுதியில் 'முதல்' என்ற சொல்லில் உள்ளதாக நாம் அமைதி தேடவேண்டியுள்ளது. ஆகவே பெயர் அமைப்பே புரட்சியானது என்று அறிய வேண்டும். யாப்பும்—இருசீரில் ஒருவரியாக உள்ளது. தமிழ் நெடுங்கணக்கில் மொழிக்கு முதலாகும் எழுத்தையெல்லாம் வரிசைப்படுத்தி அவற்றை முதலாகக் கொண்டு அறத்தைப் பேசுவதே இந்நூலின்

நோக்கம். அகர முதலாகத் தொடங்கி ஓகாரம் ஈருக 109 நூற்பா உண்டு. இத்தகு அமைப்பு முறையே இந்நூலுக்கு முன் தமிழில் புதிது வடமொழியிலும் இந்த யாப்பு முறையில்லை. இப்புரட்சியைக் கண்டு, பிற்காலத்தில் புரட்சி விரும்பும் பாரதியாரும், பாரதிதாசனும் இந்த இலக்கியப் புது அமைப்பைப் பின்பற்றினர். அவர்கள் இருவரும் வேண்டும் அளவு எண்ணிக்கையைக் கூட்டியும் குறைத்தும் உள்ளனர்.

இம்மூன்று நூலிலும் பொதுத்தன்மையும் உண்டு. புதுத்தன்மையும் காணலாம். இம்மூன்று நூலிலும் இருசீர் கொண்ட ஓர் அடி அறமே பேசும் ஔவையார் ஆத்திசூடியில் இருசொல்லே மிகுதி. பாரதி, பாரதிதாசனார் நூலில் மூன்று சொற் கொண்ட இருசீரும் சில வரும். மூன்று நூலிலும் முன்னிலை உடன்பாட்டு ஏவல் வடிவச் சொல் லமைப்பே மிகுதி. ஔவையார் ஆத்தி சூடியில் எதிர்மறை ஏவலே மிகுந்து வரும் 80% இப்படி உள. இவை பாரதி, பாரதிதாசனார் நூலில் சமமாக உள. ஏவல், எதிர்மறை வடிவங்களோடு இயல்பு. நடையில் பலவும் பின்னிருவர் நூலிலும் உண்டு, ஔவையார் நூலில் 109 நூற்பாவும் பாரதியாரில் 110ம், பாரதிதாசனில் 85ம் உள. இதற்கு என்ன காரணம்? நெடுங்கணக்கு விதிப்படி அமைத்துக் கொண்ட ஔவையார், மொழிமுதல் ஆகாத ட, ண, ய, ர, ல, ழ, ள, ற, ன, வு, வூ, வொ, வோ, இவற்றையும் தமிழ் மரபுப்படி முன்

எழுத்தின் துணையோடு வரிசை கெடக்கூடாது என்ற கருத்தில் எழுதினர். அஃதாவது 'இடம்பட வீடு எடேல்'; இணக்கமறிந் திணங்கு' என வரும். இதனலன்றே அகரத்தினும், இகரத்தினும், ஒகரத்திலும் தொடங்கும்பா பலவாக இருக்கக் காண்கிறோம்! இதனல் இவர் தமிழ் மரபு பேணும் இயல்பும் கண்டு களி கூரலாம். 'ஙப் போல் வளை', 'ஞயம்பட உரை' என்று காட்டுதலானும், சக்கர நெறி நில் ;'சையெனத் திரியேல்' என்று கூறுதலாலும் இவ்வாசிரியர் சங்க கால ஒளவையார் அல்லர் எனலாம். இவை மொழி முதலாகா. மேலும், விரதம், மூர்க்கர், மோகம், உத்தமன், தாளம், பூமி, சநித்தல் என்ற வடசொற் கலப்பும் இவர் பிற்காலத்தவர் என்பதைக் காட்டும். விரதம், மூர்க்கர், உத்தமன் என்ற சொற்கள் முறையே நாலடியார், பழமொழி, திருவாசகம் ஆகியவற்றில் காணப்படுகின்றன. ஆகவே இந்நூலாசிரியர் மேற்கண்ட நூல்கட்கும் மாணிக்க வாசகருக்கும் பிந்தியவர். அனந்தல், சையென என்ற இச்சொற்களை இவர் ஆள்வதாலும் மிகப் பிற்காலத்தவர் என்பது போதரும். ஙகரம், ஒகரம்மொழி முதலாகும் என்பது நன்னூலார் கருத்து அதனையொட்டி இந்நூலா சிரியர் 'ஙப்போல் வளை' என்ருர். நன்னூலின் காலம் கி. பி. 12நூ ஆகவே 12-14இல் தோன்றி யிருக்கலாம்.

இத்தகு சொற்களைக் கையாண்டாலும் இவ் வாசிரியர் நல்ல தமிழ்ப் புலமை மிக்கவராவர்.

அஃகம், கடிவது, கோதாட்டு, பையல், மீதூண், முனைமுகம் முதலிய அருஞ்சொற்களை ஆள்கிறார். இலக்கிய நயம் படவும் கூறுகின்றார். 'ஙப்போல் வளை' -ங ஒன்றே தொடரில் எழுத்தாய் நின்று பயன்படும். ஙா, ஙி, ஙீ, ஙு போன்ற எழுத்துப் பயன்படவில்லை ஆனாலும் நெடுங்கணக்கில் ஒப்புமைகருதி இன எழுத்தாய் உள. அஃதாவது 'ங' ஏனைய ஙா, ஙி யைத் தழுவுதல் போல், நீ, 'உறவினரைத் தழுவி ஒழுகு' என்று நயம்பட உவமையால் கூறினர். கத்தி வெட்டுப் போல் பேசாதே 'வெட்டெனப் பேசேல்'-என்ற இடத்தும் இருசீரில் கூட உவமையழகைக் காண்கிறோம். இணக்க மறிந்து இணங்கு, கைவினை கரவேல், தோற்பன தொடரேல்-இவண் மோனை அழகுண்டு. இந்நூலாசிரியர் திருக்குறள் கருத்துக்களையும், சொற்களையும், அறிவுரைகளையும் சுருங்கிய அளவில் ஆண்டுள்ளார். 'அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க' (குறள். 36) 'அறஞ் செய விரும்பு' 'சினம் காக்க' (குறள் 305) என்பது குறள். 'ஆறுவது சினம்' - ஔவையார் 'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப' (குறள் 392) எண்ணெழுத் திகழேல் - ஔவை. 'ஒப்புரவி னல்ல பிற' (குறள் 213) 'ஒப்புரவு ஒழுகு' - ஔவை 'பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாண்' (குறள் 907) தையல் சொற் கேளேல் - ஔவை. 'பண்பின் மகளிர் ...... நள்ளா விடல்' (குறள் 912) என்றார் வள்ளுவர். இவரோ - 'மைவிழியாள் மனையகல்' என்றார்

'பெரியாரைத் துணைக் கோடல்' என்பது வள்ளுவர் கண்ட அதிகாரம். 'பெரியாரைத் துணைக்கொள்' என்பது ஔவையார் கூற்று. ஆகவே ஔவையார் ஆத்திசூடி- சொல்லால், தொடரால், பொருளால் வள்ளுவர் வழியில் வந்தது என்பதும், வள்ளுவத்தின் சுருக்கம் என்பதும் அறியப்படும் வள்ளுவத்தில் இல்லாத ஔவையார் கண்ட சமுதாயத்துக்குத் தேவையான அறமும் பேசப்பட்டுள்ளன முனை முகத்து நில்லேல், வல்லமை பேசேல், வேண்டி வினை செயேல் முதலியவை இத்தகையன.

ஒரு கருத்தை அதன் தொடர்பானவற்றை சிறு வேறுபாட்டுடன் மீட்டும் கூறும் இயல்பும் உண்டு கல்விச் சிறப்பை 6 இடங்களிலும் அறச் சிறப்பை 2 இடங்களிலும் சின மொழிதல் 4 இடங்களிலும் உழவுத் தேவையை 3 இடங்களிலும் திரும்பத் திரும்பக் கூறுகிறார்.

1 ஓதுவது ஒழியேல், 2 இளமையிற்கல், 3 கேள்வி முயல் 4. நூல் பலகல், 5. பேதமையகற்று. 6. வித்தைவிரும்பு

ஆ) 1. அறஞ்செயவிரும்பு, 2 தானமது விரும்பு,

இ) 1. ஆறுவது சினம் 2. கடிவது மற, 3. மோகத்தைமுனி 4. வெட்டெனப் பேசேல் —

ஈ) 1. பருவத்தே பயிர்செய் 2 நெற் பயிர் வினை. 3. பூமி திருத்தி உண். இவை சான்றும்

100 நூற்பாவைக் கொண்ட இச்சிறு நூலிலும் பாடவேறு பாடுகளும், பொருள் வேறு பாடுகளும் இல்லாமல் இல்லை. இவையே, இந்நூல் 800 ஆண்டுப் பழமை உடையது என்பதைக் காட்டும். 10 பாட வேறுபாடும், 8 பொருள் வேறு பாடும் காண்கிறோம்.

| ஆறுமுக நாவலர் பாடம் | இராமாநுஜக் கவிராயர் பாடம் |
|---|---|
| 1 நப்போல் வளை | 1 நப்போர் விளை |
| 2 இயல் பலாதன செயேல் | 2 இயங்கித் திரியேல் |
| 3 அரவ மாட்டேல் | 3 அரவமாடேல் |
| 4 தோற்பன தொடரேல் | 4 தோற்பன தொடங்கேல் |
| 5 புகழ்ந்தாரைப் போற்றி வாழ் | 5 புகழ்பட வாழ் |
| 6 பூமி திருத்தி உண் | 6 பூமி விரும்பு |
| 7 பைய லோடிணங்கேல் | 7 பைதலோடிணங்கேல். |
| 8 பொருள்தனைப் போற்றி வாழ் | 8 போற்றடிப் பரியேல் |
| 9 வெட்டெனப்பேசேல் | 9 வெட்டென மற |
| 10 வைகறைத் துயில் எழு. | 10 வைகறைத் தொழுதெழு. |
| சனிநீராடு — சனிக்கிழமை எண்ணெய் நீராடு | புதிய நீரில் ஆடு |
| அஃகம் சுருக்கேல்—தானிய அளவு குறைக்காதே | சுற்றத்தைக் குறைக்காதே |

ஙப்போல்வளே — .... இடையே'ங' போல்
நின்று முனைமுகச்
செருச்செய்

அனந்தலாடேல்-உறக்கம் அஞ்ஞானம் வளர்க்கும்
விரும்பாதே. நூலை விரும்பாதே

இவை போன்ற உரை வேற்றுமை சில இடங்களில் காணப்படுகின்றன. இதனால் அறிவதென்ன? பலர் பயிலும் போது பாட, பொருள் வேறுபாடுகள் வரும். ஆகவே இந்நூல், வழக்கில் பெரும் பயிற்சியில் இருந்தது என அறியலாம்.

இந்நூல் எவை பற்றிக் கூறுகின்றது? கடைப்பிடிக்கத்தகும் அறவொழுக்கம், தெய்வ நம்பிக்கை, இல்லறம், துறவறம், அரசியல், சுகாதாரம், உழவு, விரும்பும் தொழில், உடல்நலம், இவைபற்றிய பல செய்திகளைக் கூறும்.

இவ்வளவு பொலிவும், புதுமையும் இருந்தமையால், பாரதியாகும், பாரதி தாசனும் இதை அடியொற்றி நூல் செய்தனர். ஆத்திசூடி என்ற பெயரும் சூட்டினர். ஆத்திசூடி வெண்பா, ஆத்திசூடி புராணம் என்ற நூல்களும் தோன்றின.

II

இனிப் பாரதியாரின் ஆத்திசூடி பற்றிக் கருதுவோமா? இவர், முன்னோர் யாப்பை அப்படியே எடுத்துக்கொள்கிறார். பழைய கள்ளில் புதுக்கள்ளைச் சேர்ப்பது போல் யாக்கிறார். மொழி முதலாகா எழுத்தான ட, ண, ள, ழ, ற, ன, வு, ஞ இவற்றை நீக்கி விட்டு, பாரதியார் காலத்தில்

வழக்கில் பழகு தமிழோடு கலந்த ஞ, ய, ல ர, வர்க்கங்களைக் காட்டிப் பேசுகிறார். வரிசை அமைப்பிலும் ஔவையாரின் நெடுங்கணக்கு முறையில் நூல் செய்யாமல் சிறிது மாறுபடுகிறார். அவர் நெடுங் கணக்கு முறையில் அமைத்தார். பாரதியார் ஒவ்வொரு மெய்யெழுத்தின் வர்க்க முறையை முடித்துக் கொண்டு பின்பு வரிசையைத் தொடர்கிறார். இவையே வேறுபாடு எதிர்மறை ஏவல் மிகுதியும் இல்லை. ல, ர வர்க்க எழுத்தை மேலும் காட்டுகிறார். இதனால் இவர்கால மக்கள், வடமொழித் தொடர்பால் ல, ர வையும் மொழி முதல் எழுத்து என எண்ணி மயங்கத் தொடங்கிய மனநிலை புரிகிறது.இந்தச் சிறுநூலிலும் பாரதியாரை நாம் முழுமையாகக் காணலாம். பாரதியின் வீர உணர்வு, விடுதலை உணர்வு, தேசீய உணர்வு, பத்தி உணர்வு, வேதப் பயிற்சி, பெண் விடுதலை, சீர்திருத்த உணர்வு, பொது அறம் பேசல் என்ற இன்ன 8 செய்திகளைப் பற்றி இந்நூல் கூறுகிறது. இவற்றில் 27%வீரம், தேசீயம் பற்றியவை. 110ல் வீரம் பற்றி 13பாவும், தேசீயம் பற்றி 14பாவும் உண்டு. மதம் தொடர்பாக 8பாவும் பெண்டிர் பற்றி ஒன்பதும், சீர்திருத்தம் பற்றி 10பாவும் கூறி யுள்ளார். சான்றாகச் சில காண்போம்.

| 1. வீரம் | 2. தேசீயம் |
|---|---|
| 1 அச்சம் தவிர் | 1 ஒற்றுமை வலிமை யாம் |
| 2 ஆண்மை தவறேல் | 2 கைத்தொழில் போற்று |

| | |
|---|---|
| 3 சூரரைப் போற்று | 3 கொடுமையை எதிர்த்து நில் |
| 4 சீறுவோர்ச் சீறு | 4 தேசத்தைக் காத்தல் செய் |
| 5 போர்த்தொழில் பழகு | 5 கூடித்தொழில் செய் |
| | 6 தாழ்ந்து நடவேல். |

| **3. மதம்** | **4. சீர்திருத்தம்** |
|---|---|
| 1 தெய்வம் நீ யென்றுணர். | 1 சோதிடந்தனை யிகழ் |
| 2 ஐம்பொறி ஆட்சி | 2 தொன்மைக் கஞ்சேல் |
| 3 மந்திரம் வலிமை | 3 பேய்களுக் கஞ்சேல் |
| | 4 முனையிலே முகத்துநில் |
| | 5 லௌகிகம் ஆற்று |
| | 6 வேதம் புதுமை செய் |

பாரதியார் கூறும் பிறர் சுட்டாப் பொது அறம்.:- 1. கிளைபல தாங்கேல் 2. பாட்டினில் அன்பு செய். 3. பணத்தினைப் பெருக்கு 4. ஔடதம் குறை என்ற -பாரதியாரின் சொந்த அனுபவங்கள் அறிவுரையாகின்றன.

சீறுவோர்ச் சீறு பெரிதினும் பெரிது கேள்- என்பன நல்ல இலக்கிய நயம் கொண்டவை. பாரதியாரின் அரசியல் கருத்துக்கள், ஆங்கிலே யரை எதிர்க்க முனைந்த முயற்சி, சமுதாய முன்னேற்றத்திற்குத் தடையாக இருந்தவை- இவை பற்றிய செய்திகளைப் பாரதியாரின் ஆத்தி சூடி பேசுதலால், அவர் காலத்துக்குக் கட்டுப் படும் இயல்பும், பொதுஅறம் பேசும் போது காலச்

சூழ்நிலைக் கடந்து நிற்கும் வீறும் பெறப்படும். பாடலை அமைத்துக் கொண்ட முறையில் புலவனின் தனிப்பண்பும் புலனாகும்.

III

இனிப் பாரதி தாசனாரின் ஆத்திசூடி பற்றிக் காண்போம். இவரும், பாரதியார் வழியில் வர்க்க எழுத்துக்களை முடித்துக் கொண்டு நெடுங்கணக்கு அமைப்பில் பாச் செய்கிறார்; ஔவையின் போக்கைப்பின் பற்றவில்லை. சொற்றொடர் அமைப்பில் கருத்துக் கூறல்முறை மிகுதி. ஏவல் குறைவே. தொல் தமிழ் மரபுப்படி, மொழி முதலாகும் எழுத்துக்களை மட்டும் கருத்திற் கொண்டு, ய, ர, ல போன்ற பலவற்றையும் அவற்றின் வர்க்கங்களையும் விட்டுவிடுதலால் 109, 110 என்ற எண்ணிக்கை 85 ஆக இவரிடம் குறைகிறது.

இவரது நூற்பா இவர்தம் சங்க நூற் பயிற்சியையும் இவர் தமிழாசிரியராய் இருந்தவர் எனபதையும் தெரிவிக்கும். "யாதும் ஊரே யாவரும் கேளிர்" (புறம்) இவரோ 'அனைவரும் உறவினர்' என்றார். 'ஈத்துவக்கும் இன்பம்' (குறள் 228) இவர் 'ஈதல் இன்பம்' என்றார். 'பைந்தமிழ் முதன்மொழி' எனவும் கூறுவர்.

இவர் பாவில் அரசியற் கருத்துக்களும், கட்சிக் கருத்துக்களும், அறிவியல், சுகாதாரம் பற்றிய கருத்துக்களும், நாட்டு நலனுக் கேற்ற பொதுச் செயலும் இடம் பெறல் காணலாம். சான்றாகச் சில :-

## 1. அரசியல்

1 ஆட்சியைப் பொதுமை செய்
2 உடமை பொதுவே
3 கோனாட்சி வீழ்த்து
4 கொடுத்தோன் பறித்தோன்

## 2. கட்சிக்கருத்து

1. பார்ப்புப் பொதுப்பகை.
2. மறையெனில் சூழ்ச்சி.
3. வீடெனல் சாதல்
4 கீழ்மகன் உயர்வெனும்.

## 3. சீர்திருத்தம்

1 ஐந்தொழில் இறைநீ
2 கைம்மை அகற்று
3 நால்வகைப் பிறவி பொய்
4 நூலும் புளுகும்
5 பெண்ணோடாண் நிகர்
6 பேயில்லை மதமல்லால்
7 மாறுவது இயற்கை

## 4. அறிவியல்-சுகாதாரம்

1 சேய்மை மாற்று
2 நெடுவான் உலவு
3 தூய நீராடு
4 மிதியடியொடு நட
5 வேளையோடு ஆரஉண்
6 மெய்க் கழிவு
7 அயல் இன்று

## 5. பொது அறம்

1 சிறுர் நலம் தேடு
2 தீங்கனி விளை
3 மொடு மாற்றம் பொது இன்று
4 ஏடு பெருக்கு
5 சொற் பெருக்காற்றல் கொள்

இத்தகு பகுதிகளால் பாரதிதாசனுர் இனிய விருப்பங்களும் அவர்காலப் போக்குகளும் நன்னர் அறியப் பெறும்

இம்மூவர் முறையிலும் பொதுமையும் உண்டு, தனிமையும் உண்டு. காலம் கடந்த பொது அறங்களும் உண்டு. காலச் சூழல் வாய்ப்பட்ட அறங்களும் உண்டு. எளிய பொருளும் உண்டு அரிய சொற்களும் உண்டு. இவை சிறுர்க்குச் சொன்னுலும், பெரியவர்களின் அறிவிற்கும், அனுபவத்திற்கும் ஏற்றவையே. சிற்றுளி, பெரிய மலையைப் பெயர்த்தல் போல் நமது கரடு முரடான கல் நெஞ்சத்தைக் கனியாக்கும் காவியச் சொற்களும் கற்கண்டு கருத்துக்களும் ஆங்காங்கே மின்னுகின்றன.

இவர்கள் வழியைப் பின்பற்றி டாக்டர். வ. சுப. மாணிக்கனுர், டாக்டர். தமிழண்ணல் போன்ற அறிஞர்கள், சுரதா, முத்துக்கணேசன், சுந்தானந்த பாரதியார் போன்ற கவிஞர்கள் ஆத்திசூடி செய்தனர். இன்று பதினுன்கு பேரின் ஆத்திசூடிகள் அச்சில் உள. இவையும் கற்கத்தகும். இவை ஒளிகாட்டி வழிகாட்டும் என்பது உறுதி.

# 8. தமிழ்விடு தூது

**முன்னுரை :-**

தமிழ், வளரும் இலக்கியங்கட்கு வழிவகுத்த ஒரு மொழி. புதுமைப் பொலிவைப் பொற்றும் மொழி. காப்பியங்கள், நீதி நூல்கள், பரணி, உலா, பிள்ளைத் தமிழ், சதகம் எனவளர்ந்த நந்தமிழ் மொழி, தூது இலக்கியங்களையும் படைத்துக் கொண்டது இன்றுள்ள தூதிலக்கியங்கள் பற்றிய அமைப்புக்களை, தொல்காப்பியம் கூறவில்லை தூது பற்றிய சில குறிப்புக்களே அங்கு உண்டு. தொல்காப்பியர், "விருந்தே - தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" - என்றும், 'கடிசொல் லில்லை காலத்துப்படினே' என்றும் கூறிய சூத்திரங் களில் புதிய யாப்புக்களை வரவேற்றார். வளரும் மொழிக்கு - வாழும் மொழிக்கு இத்தகைய மடைக் கதவுகள் மிகுதியும் தேவை. ஆகவே தான்-குமரித் தமிழாக-கன்னித் தமிழாக நிலவுகிறது.

'தூது'-என்பது தூவுதல்-பரப்புதல் என்பதன் அடிப்படையாகப் பிறக்கும். தூது என்பது என்ன? கருத்து ஒருமையில்லாமல் மாறுபட்ட நிலையில் சமன் செய்ய ஒருவரை அல்லது ஒன்றை அனுப்புதல் - ஒரு கருத்தைப் பரப்புதல் என்பதாம்.

மகனுக்கும் தந்தைக்கும் கருத்து வேறுபாடு; மனைவிக்கும் கணவனுக்கும் ஊடல். ஓர் அரசிற்கும்

நட்பாய் இருந்த மற்ருேர் அரசிற்கும் திடீர் முரண் இரு நண்பர்களுக்கிடையே மனவேறுபாடு. இப்படிப் பல முரண்கள் நாளும் நிகழ்கின்றன. எதனுல் ? பிழைபட உணர்வதால்; இதனை நீக்கிப் பழைய - பசிய உறவு நிலவ என்ன செய்வது? தூது அனுப்பி முரணை அறுக்கலாம் - நீக்கலாம். இத்தூது, காதல் வாழ்க்கையிலும் உண்டு; அரசியல் வாழ்க்கையிலும் உண்டு ஆகவே-தூது - அகம் - புறம் என்ற இரு ஒழுகலாற்றிலும் இடம்பெற்று, ஏற்றம் தருகிறது.

அறிவும் சொல்லாற்றலும் மிக்கவர் தூதாவர். அரசியலிலே தூதுவர் (Ambasiders) இன்றியமையாத உறுப்பினராவர்.

"தூது" என்றே, வள்ளுவர் ஓர் அதிகாரம் வகுத்தார். ஔவையார் - தொண்டைமானிடம் அதிகமான் பொருட்டுத் தூது சென்ருர். சொல்லின் செல்வன் அனுமன், அங்கதன் ஆகியோர் இராவணனிடம் தூது போயினர். துரியோதனனிடம் கண்ணனும், சூரபன்மாவிடம் வீரவாகும் தூதாயினர். இவை அரசியல் தூதாகும்.

புலவர்கள்-புரவலரிடம் தூதனுப்புதல் உண்டு. பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழனுக்கு அன்னச் சேவலைத் தூதுவிட்டார். இவை புறத்துறையில் வரும் தூதுகள்.

**அகத்தூது :-**

அகத்துறையில் தூது அனுப்புதல் பெருகிய வழக்காம். தலைவனிடம் ஏதேனும் பொருளை

தூதனுப்பும் தலைவியர்பற்றிய செய்திகளைச் சங்க இலக்கியங்களில் காணலாம். அகநானூற்றுத் தலைவி தன் காதலனுக்கு நண்டினைத் தூது விடுகிறாள். (அகம். 170) நற்றிணையில் வெண்குருகையும் கிளியையும் தலைவி தூதுவிடுகிறாள். (நற்றிணை 54, 70, 102) குறுந்தொகையில் மணிச்சிறை வண்டைத் தூ தா க செல்லவிடுகிறாள். (392) ஐங்குறுநூற்றில் நெஞ்சு (317) தூதாகச் செல்கிறது. இங்கெல்லாம் தலைவியே, தலைவன்பால் தூது விடுகிறாள். தலைவன், தலைவிக்குத் தூது விடுத்த செய்தி சங்க இலக்கியத்தில் இல்லை. இவைகூட களவொழுக்கம் முடித்த பின்னர் தலைவன் தன் வருகையைக் குறைந்துக் கொண்டபோது பொறுப் புணர்ச்சிக் காரணமாகத் தலைவியர் பதறி இப் பொருள்களைத் தூதாக விடுத்தனர். இதனை 'காமம் மிக்க கழி படக் கிளவி' என்ற துறைச் சொல்லால் கூறுவர். கற்பொழுக்கத்திலும் தலைவி ஊடிய போது "தோழி, தாயே, பார்ப்பான், பாங்கன்" முதலியோர் தூதாகச் செல்வது உண்டு.

காதல் உணர்ச்சி, அளவு மிஞ்சாமல் அடக்க மாக அமைவதுதான் தமிழ் உலகம் பாராட்டும் காதல் மேம்பாடு. சற்று கூடுதாக அமைந்து பேசுகிற பேச்சும், அவ்வாறு வெளிப்படுமானால் அது தலைவனானாலும் சரி, தலைவியானாலும் சரி பொருந்தாக் காமமாக இழிந்த காமமாக ஆகிவிடும். இதனைப் பெருந்திணை என்பர். யாரேனும் ஒருவர் மட்டும் காதல் கொண்டு மற்றொருவர் காமவிருப்பம்

இல்லாதிருந்தால் அது ஒரு பக்க விருப்பமாக ஆகும். இதனைக் 'கைக்கிளை' என்பர்.

தூது இலக்கியங்களில் - காமச் சுடர் கனன்று சுட்டெரிப்பதாகப் பேசும் பேச்சுக்கள் வருதலின் பெருந்திணைக் கூறும் ஒருபக்க விருப்பத்தைப் பேசுதலால் கைக்கிளைக் கூறும் கலந்த கலப்பாகவே உள்ளன. ஆகவே தூதிலக்கியங்களை அகப்புற இலக்கியங்கள் என்றே கூறுதல் வேண்டும் காதல் உணர்வின் தொடக்கமும் முடிவும் இவ்விலக்கியங்களில் இடம்பெறுகின்றன காதல் உணர்ச்சியின் வீக்கமும் தூக்கமும் தாக்கலும் நன்கு படம் பிடிக்கப் படுகின்றன.

தொல்காப்பியர் தந்த தூதுக் குறிப்புக்களைச் சங்கப் புலவர்கள் களவிலும், கற்பிலும் பயன்படுத்தினர். இத்தூதுப் பொருள்களைப் பிற்கால நூல்கள் சற்றே விரிவு செய்தன. தேவரரத்தில் அன்னம் அன்றில், குயில், குருகு. கிளி, நாரை, பூவை. வண்டு, வாரணம், தென்றல், சேவல், கொண்டல் முதலிய அஃறிணைப்பொருள்களும், திருவாசகத்தில் கோத்தும்பி. குயில் முதலியனவும் ஆழ்வார் நூல்களில், மேகம், குயில், செம்போத்து, நாரை, வண்டு முதலியனவும் தூது சென்றதாக அறிகிறோம்

சங்க இலக்கியத்தில் இல்லாத குயில், பூவை, வாரணம், தென்றல், கொண்டல் மேகம், செம்போத்து இவை கால வளர்ச்சியாலும் கவிஞனின் கருத்து வளர்ச்சியாலும் புதிய *தூ*துப் பொருளாப் புகுந்தன. ஆகவேதான், "இயம்புகின்ற காலத்து

எகினம் மயிலை கிள்ளை பயம் பெறும் மேகம் பூவை பாங்கி நயந்த குயில் பேதை நெஞ்சம், தென்றல், பிரமரம் ஈரெந்துமே தூதுரைத்து வாங்கும் தொடை'' என இரத்தினச் சுருக்கம் கூறிற்று,

10 பொருள்களே தூதுப் பொருள் என வரம்பு செய்தாலும் இதற்குள் அடங்காமல் புதுப் புதுப் பொருள்களாக 20க்கு மேலானவை அனுப்பப் பட்டுள்ளன. தாமரை, நெல், துகில், குவளை, சண்பகம், விறலி, புரு, பொன், புகையிலை, பணம், மான், அன்பு, தந்தை, பிள்ளை, தமிழ், காக்கை, செருப்பு, பழையது, புலவர், எமன், தந்தி, கழுதை என இவைகூடத் தூதாயின. இங்கே சில மங்கலப் பொருள்களும் சில கீழ்நிலைப் பொருள்களும் தூதாவதை அறிகிறோம். கழுதை போன்ற கீழ்நிலைப் பொருள்கள் பகைவர்பால் விட்ட தூதுப் பொருளாம். நட்பாகிய காதலுக்கு மறுதலையான பகைவர்க்குப் தூதாகும் பொருளும் கீழ்நிலைப் பொருளாகவே இருப்பது பொருந்தும்.

மேலே சொன்ன பத்துப் பொருள்களுள் மயிலையும் பாங்கியையும் தூதாக விட்ட இலக்கியம் இன்று நமக்குக் கிடைக்கவில்லை. 'விறலியைத் தூதாக்கிய செய்தி கேட்கப்படுகின்றது. இன்னும் தலைவியர் தூதுவிடுத்த இலக்கியமே மிகுதி. தலைவர் தூது விடுத்த இலக்கியம் மிகச் சுருக்கம். விறலிவிடு தூது, பணவிடு தூது என இவை தலைவன் விட்ட தூதிலக்கியமாகும். இதற்குக் காரணம் என்ன ? தலைவியர்க்கு நாணம் மிகுதி. ''தாம் உற்ற காதல் தாமே உரைத்தல்

மாதர்க்கு வழக்கமில்லை'' தலைவன் இப்படியில்லை. குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ அவனே பேசிவிடுவான். ஆகவே தலைவன் காதலிக்குத் தூது விடுத்ததாக தூது இலக்கியங்கள் பெருக வில்லை. இங்குத் தமிழ்ப் பெண்ணின் பண்பாடும் நாகரிகமும் தெரியவருகிறது

**தூது இலக்கணம் :-**

இந்தத் தூது இலக்கியங்கள் எவ்வாறு பெயர் பெறும் ? ஆற்றுப்படை இலக்கியங்கள் போல், தூதாகச் செல்லும் பொருளின் பெயரை, இவ்விலக் கியமும் பெறும். இந்த வகையிலும் முன்னெறி யைப் போற்றியுள்ளனர். கிள்ளையை அனுப்பினால் கிள்ளைவிடு தூது எனவும், நெஞ்சை அனுப்பினால் நெஞ்சுவிடு தூது எனவும், விறலியை அனுப்பினால் விறலிவிடு தூது எனவும் பெயர் பெறுமேயல்லாமல் தலைவி பெயரையோ, தலைவன் பெயரையோ பாடப் படுவோர் பெயரையோ பெறுதலை இல்லை

தூது இலக்கியத்தின் அமைப்பு யாது? புலவர்க்குப் புலி, என்பர் வெண்பா யாப்பை. அந்தக் கடுமையான யாப்பு வகையில் ஒன்று கலி வெண்பா. அந்த யாப்பில் கவி செய்யவேண்டும். ''பயிறருங் கலி வெண்பாவினாலே உயர்திணைப் பொருளையும் அஃறிணைப் பொருளையும் சந்தியின் விடுத்தல் வந்துறு தூதெனப் பாட்டியற் புலவர் நாட்டினர் தெளிந்தே'' என்ற நூற்பாவால் அறிய லாம்.

ஒருதலைவன்மேல் காதல்கொண்ட தலைவி, தன் காதல் நோயின் துயரத்தைக் காதலனுக்கு எடுத்துக்கூறி 'மாலை வாங்கிவா' தூது சொல்லிவா' என்று உயர்திணைப் பொருளையோ அஃறிணைப் பொருளையோ தூது விடுப்பதாக அமைப்பது இதன் இலக்கணம் இங்கு ஒரு ஐயம் எழும்; எழ வேண்டும். உயர்திணைப் பொருள் உரைத்தல் சரி. ஆனால் அஃறிணைப் பொருள்-பேசும் இயல்பில் லாதவை எவ்வாறு தூது உரைக்க இயலும் ?

காதல்வேகம் தலைக்கேறிச் சாக்காடு அனைய துயரம் வந்துற்றபோது பித்தாகிப் பேசாதவையும் பேசுவதாக எண்ணித் தன் மனவருத்தத்தைக் கொட்டிக்காட்டி ஆறுதல் அடைவாள் தலைவி என்பதாம். ''மூடி வைத்து வேகின்ற பாத்திரத்தின் மூடியைத் திறந்தால் அதன் ஆவி வெளிப்பட்டு வெப்பம் குறைவதுபோலத் துயரம் மேவிய தலைவி பேசிப் பேசி ஆறுதல் பெறுவாள்'' என்பது பயன். தமிழ்ப் புலவர்களின் மனவியல் போக்கு இங்கு நன்கு தெரிகிறது. இதனை இலக்கணப் புலவர்களும் ஒத்துக்கொண்டு இலக்கணம் செய்துள்ளனர். "கேட்குந போலவும் கிளக்குந போலவும் இயங்குந போலவும் இயற்றுந போலவும் அஃறிணை மருங் கினும் அறையப்படுமே'', என்பது நூற்பா.

இத்தகு வடிகால் - போக்கு - வடமொழி, மலையாளம், தெலுங்கு, கன்னடம்,சிங்களம், வங்கம் முதலிய மொழிகளிலும் உள்ளன. தமயந்தி நளன் பால்விடுத்தஹம்ஸஸந்தேசம், காளிதாசனின் மேக

ஸந்தேசம் முதலியன வடமொழியில் பெயர் பெற்ற தூது இலக்கியங்கள் இல்லையா?

தமிழில் தூது என்பது சங்ககாலம் தொடங்கினாலும், கலம்பக உறுப்பாக இடைக் காலத்து வளர்ந்து இருந்தாலும் தனி இலக்கிய வகையாக உருப்பெறத் தொடங்கியது 14 ஆம் நூற்றாண்டில் தான். முதல் தூது இலக்கியம் நெஞ்சுவிடு தூது என்பதாம். இதன் ஆசிரியர் சைவப்பெரியார் உமாபதி சிவாசாரியார் ஆவர். இவரது வழியில் சுமார் 61 தூது இலக்கியங்கள் பின்னர் தோன்றி யுள்ளன. சிற்றிலக்கியங்களுள் 'தூது' பிற்கால வளர்ச்சியுற்றது என்பதைத் தமிழ் விடு தூது ஆசிரியரும் சுட்டுகிறார். தமிழுக்கு மெய்க்காப்பாக உள்ள நூல்களைக் குறிக்கும் போது "பாடற்கரிய பரணி" 'பொன்னீந்த உலா, எனவும், பராவுமவன் பிள்ளைத் தமிழ்' எனவும் சொன்னாரே தவிர தூது இலக்கியத்தைக் குறிக்கவில்லை

இனி தூது இலக்கியத்தின் பொது அமைப்பு யாது? என்பதைக் காண்போம். 1 தூதுப் பொருளின் சிறப்புரைத்தல் 2 யாருக்குத் தூது அனுப்பப் படுகிறதோ அத்தலைவனின் அருமை பெருமை கூறல், 3 தலைவியின் காமம், காதல் நோய், தூதுப் பொருளை வேண்டுதல், அப் பொருளைத் தவிர வேறு எப்பொருளும் தூதாதற்கு ஏற்படைத்து என்று கூறுதல் என்றவாறு அமைவது இத்தூது இலக்கியத்தின் வடிவ அமைப்பு ஆகும்.

இந்தத் தூது இலக்கியங்களுள் 'தமிழ்விடு தூது' என்பதும் ஒன்று. இந்நூலின் குறிக்கோள் யாது? அமைப்பு யாது? என்று காண்போம்.

வழியை முடிவு செய்துகொண்டு, வழிப் போக்கன் ஊர் செல்ல வேண்டும். இன்ன இடத்தில் இன்ன பொருளை விற்பது என்றுவணிகன் அறுதியிட்டுப் பொருளை விற்கவேண்டும். இவை போல் கவிஞன் தான் நூல் செய்தற்குச் சில குறிக் கோள்களைக்கொண்டிருப்பான் 'அரைசியல் பிழைத் தோர்க்கு அறம் கூற்றுவதும் உரைசால் பத்தினி யை உயர்ந்தோர் ஏத்தலும் ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும் என்பதும் சிலப்பதிகாரக் குறிக்கோள்.

ஒழுக்கத்தின் உயர்வைப் பேசுவது கம்பரின் குறிக் கோள். ஆகவே அவர் "நடையின் நின்று உயர் நாயகன் தோற்றத்தின் இடை நிகழ்ந்த இராமா வதாரம் போர்த் தொடை நிரம்பிய தோம்அறு மாக்கதை" செப்பியதாகக் கூறினர். இங்கு நடை என்பது ஒழுக்கத்தை குறிக்கும். இவ்வாறு ஒவ்வொரு நூலாசிரியரும் ஒன்றோ பலவோ குறிக் கோளைக் கொண்ட நூல் செய்தனர். "தமிழ்விடு தூது ஆசிரியர் பேசும் குறிக்கோள் யாவை?

1 மதுரை சொக்கேசப் பெருமானின் பெருமை பேசுவது
2 சைவ அடியார்களின் அருமை கூறல்
3 செந்தமிழைத் தெய்வமாகப் போற்றுதல்

ஆகவே, சைவமும் தமிழும் வேறில்லை - இவை

இரண்டும் "ஞாலமிசை தம்புகழே பரப்ப வேண்டும்" என்பதே இந்நூலாசிரியரின் குறிக்கோளாம்.

II

**தமிழ்விடு தூது நயம் :**

பொதுவாக உள்ள சில சொற்களைத் தம் சிறப்புப் பொருளில் பயன்படுத்தும்போது சில அடைச்சொற்களைக் கையாண்டு புலவர்கள் சொற்சிலம்பாடுவர். அது படிப்போர்க்கும் கேட்போர்க்கும் தாழா இன்பம் தரும் நூல், பா, கலை, செய்யுள் என்பன ஆடையின் முதற் பொருள் கட்கும், செய்யுளுக்கும் பொதுவான சொற்கள் பல பொருள் தரும் பொதுச் சொல்லைத் தமிழ் மொழிக்கு மட்டும் பொருந்திவருமாறு இத்தூதாசிரியர் சில சொற்களை முன்னர்ச் சேர்த்து கவிநயம் பட மொழிகிறார்,

> ''பஞ்சிபடா நூலே பலர் நெருடாப் பாவே கீண்டு
> எஞ்சியழுக்கு ஏரு இயற்கலையே — விஞ்சுநிறம்
> தோயாத எந்தமிழே ! சொல்லேர் உழவர் அகம்
> தீயாது சொல்விளையும் செய்யுளே ! ''

என்று விளிப்பது அழகிற்கு அழகு இயற்றுவது போல் இல்லையா ? இங்கு மேலும் ஒரு நயம் உள்ளது. வானம் பொய்த்தாலும் அரசு கோல் கோடினாலும் உழவன் உழைப்புக் குன்றினாலும் நிலத்தே விளைவு தீர்ந்துவிடும். சொல்லேர் உழவர் தமிழ் நிலத்தில் விதைக்கும் தமிழ் விதை

காலந்தோறும் ஒன்று நூருக நூறு கோடியாக மணி பற்றி வளர்ந்தே வருதலல்லால் தீந்ததில்லை எனத் தமிழ் நூல்களின் பெருக்கத்தைத் தீயாத விளைவாகப் பாராட்டுகிருர். தேன்-சுவையானது. உணவாகவும் மருந்தாகவும் இருந்து உடலுக்கு உரம் செய்வது. தமிழும் தேனும், ஆனுல் புத்திக்கு - அறிவிற்கு உரம் செய்வது "புத்திக்குள் உண்ணப்படும் தேனே" என்றது அருமையான கற்பனை

ஒரு சொல்லையே திரும்பத்திரும்பப் பயன் படுத்தி வேறு பொருள் பயக்குமாறு பாடுவது ஓர் அரிய புலமையாம். இவ்வாசிரியர் இப்படிச் சில அடிகளை அமைக்கிருர்.

> " முன் இறந்தாள்
> அங்கத்தைப் பூம்பாவை யாக்கினுய் ஆதலினென்
> அங்கத்தைப் பூம்பாவை யாக்காயோ"

இந்த முதலடியில் அங்கம் என்பது எலும்பையும் பூம்பாவை ஒரு பெண்ணின் பெயரையும் குறித்துத் திருஞானசம்பந்தர் செயலைப் பாராட்டியதாகும். பின்னடியில் அங்கம் என்பது தலைவியின் மெலிந்த உடலையும் பூம்பாவை - பொலிவும் அழகும் உள்ள பாவை போன்ற பெண் என்ற பொருளிலும் வருதல் காண்க. மற்ருேர் இடத்தில்

> " பொன்னனையாள் வீடும் புகுந்திருக்க லாமெனின்
> பொன்னனையாள் வீடும் பொருந்தாதோ ?

என்று கேட்கிருள். இங்கு - முதலடியில் பொன்னனையாள் என்பது திருப்புவணம் என்ற

பதியில் வாழ்ந்த தாசியையும், அடுத்த அடியில் திருமகளை ஒத்த தலைவி என்றும் பொருள்படக் காண்கிறோம். இங்கு மற்றுமோர் வினை நயம் உண்டு. பரத்தை வீட்டுக்குச் சென்றவர் தலைவி யாகிய என் வீட்டுக்கு வரலாகாதா என்று தருக்க முறையில் தலைவி பேசுகிறாள்.

இனி ஒரு சொல்லே உடன்பாட்டிலும் எதிர் மறையிலும் வந்து அழகுற அமையக் காணலாம்.

> ' திறமெல்லாம் .. ...
> வந்ததென்று சிந்தா மணியா யிருந்தவுனை
> சிந்துஎன்று சொல்லியகா சிந்துமே''

என்ற பகுதி சுவைபொருந்தியதாம். தமிழில் 'சிந்து' என்ற நாடகப் பகுதியும் சிந்தாமணி என்ற காப்பியமும் உண்டு. சிந்தாமணியிருக்க உன்னைச் 'சிந்து' என்று சிலர் சொன்னால் அப்படிக் கூறி யவர் நா சிந்தட்டும் - சிதையட்டும் என்ற பகுதியில் சொல் நயமும் தமிழ்ப் பற்றும் சிறந்தினி தோங்கக் காண்கின்றோம். சொல்லும் உடன்பாடு-எதிர்மறையில் வருகிறது.

> " தேடிமுடி யாவடியைத் தேடாதே நல்லூரில்
> பாடிமுடியாப் படைத்தோரும்'' -

என்ற அடியில் பிரமனும் திருமாலும் தேடியும் காணாத திருவடியைச் சிவபெருமான், திருநல்லூ ரில் திருநாவுக்கரசருக்கு அவர் தேடாமலே இறைவன் தாமாகத் திருவடி சூட்டி ஆட்கொண் டார் என்ற பகுதியில் காண்க. இறைவன்

ஆணவம் அழித்தவர்களுக்கு கையுறு நெல்லியங் கனிபோல் காட்சியளிக்கும் எளிமையும் குறித்தார். இவ்வழகு உள்ளுந்தோறும் நறுங்கள் எனச் சுவை கனியுமிடமாகும்.

வந்த சொல்லே வந்து வனப்பாகும் இடங் களும் உண்டு. "நினையும் படிப்பெல்லா நின்னை படிப்பார் உனையும் படிப்பிப்பாருண்டோ"- என்றும் காணுதான் காட்டுவான் தான் காணுன் கண் ணெதிரே நாணுதிராதே" - என்ற பகுதியும் "கொள்ளம்பூதூர் வெள்ளக் கொள்ளை கடந்தாய் என்மேல் வெள்ளம் கடத்திவிட வேண்டாவோ"- என்ற பகுதியும் 'அம்மை தமக்கில்லாதார் அம்மை தாமாவிருந்தார் அம்மை யென்று முன்னுரைத்த அம்மையாய்" அஃதாவது இறைவன் தமக்குத் தாயில்லாதவர். திருச்சிராப்பள்ளியில் தாமே, தாயுமானுர். தம் எதிரே வந்த காரைக்கால் அம்மையாரை அம்மையே என்று அழைக்க வைத்த தமிழே! என்று பாராட்டும் இடமும் கல் லார்க்கும் களிப்பளிக்கும் களிப்பாகும்.

மற்றும், 'தமிழே! நீ பல செய்யுட் தொடைகளை யுடையாய். நீ இறைவனிடம் சென்று ஒரு தொடை (மாலை) வாங்கி வரலாகாதா என்ற பகுதியும்,

" அர்சனைபாட் டேயாகுமென்ற ஆரூரார்க்கு ஆதியிலே
கொற்றமிழ் பாடுக எனச் சொன்னமைபால்– சொற்படியே
செய்தாய் நால்வேதந் திகைத் தொதுங்கப் பித்தன் என்று
வைதாய் நீ! வைதாலும் வாழ்த்தாமே

என்றஇடத்தில் எத்தனை பொருளும் நயமும்பொதிந் துள்ளன? திருமறைக் காட்டில் வேதத்தால்மூடிய கதவுகளைத் தமிழ்ப்பாட்டால் திருநாவுக்கரசர் திறந் தார். தமிழில் ஞானசம்பந்தர் "பித்தா பிறைசூடி என்று பாடினுர். ஒருவரைப் பித்தா என்ருல் அது வசையாகுமே தவிர இசை யாகுமா ? இவ்வாறு னவதாலும் அது வாழ்த்தாகிறது என்று நாவாரத் தமிழைப் போற்றுகிருர்.

**கனியாக உருவகம் :-**

இனித் தமிழைக் கனியாக உருவகிப்பதைப் பருகி மகிழ்வோம் பாவாகிய வரப்பும் பாவினங் களாகிய மடைகளும் நாற்கணமாகிய ஏரையும் கொண்டு சொல்லேர் உழவர் அறம் பொருள் இன்பம் வீடு என்ற விதையை விதைத்துப் பயிர் வளர்க்கும்போது, அறியாமையாகிய களைகள் வருமானுல் அக்களைகளைப் 'பிள்ளைப் பாண்டியன் வில்லி, ஒட்டக் கூத்தனிவர்... 'குட்டிச் செவி யறுத்துக் கூட்டித் தலைகளெல்லாத் வெட்டிக் களை பறித்து"—பால் முந்திரிகை, வாழைக்கனி, கரும்பு, தேங்காய் பாகங்களோடு அமுதச்சுவையைப்பெற்று முத்திக்கனியாய்ப் பழுக்கிறது என்ற இடம் உலப்பிலா ஆனந்தம் தரும் இடமாம். இங்குக் களை நீக்கும் செய்திக்குப் பழைய பிள்ளைப் பாண்டியன் முதலியோர் வ ர லா று கூறியதும், பாக்களின் சுவையை நுகர்வதில் முந்திரி, வாழைக் கனி முதலான பொருள்களை உவமைப்படுத்தியதும் இப்புலவரின் புலமையை நீட்டி அ ள க் கு ம் கோலாக அமைகிறது

தமிழே தகுதி :-

தலைவி, தமிழைத்தவிர, பிற பொருள்களாகிய அன்னம் முதலியன தூதாகும் தகுதி இல்லை என்று காரணங்காட்டும் இடமும் தொட்ட இடமெல்லாம் இன்பம் தட்டுப்படும் இடமாக உள்ளது தலைவி கூறுகிருள் "அன்னத்தைத் தூதாக விடலாம். ஆனல் இன்னந்தான் அன்னம் (பிரமன்) சிவனை (முடியை)க் கண்டறியவில்லை. வண்டைத் தூதாக விடுக்கலாம். சிவஞேகாமம் செப்பாது கண்டது மொழிமோ ? என்று முன்பே சினந்து கூறி விடுத்தவர் இறையனுராகிய புலவர். ஆதலின் வண்டு செல்லுதலும் பொருத்தமின்று. தப்பாது மானைப் போய்த் தூது சொல்லி வா எனலாம். அவர் புலித்தோல் உடுத்தவர் ஆதலின் புலிக்கு அஞ்சி மான் ப ர ம ர் பா ல்சாராது. பூங்கோகிலத்தை விடுக்கலாம். கரிக்குருவிக்கு உபதேசம் செய்து அதனை வலியானுக அமைத்துக் கொண்டதால் அதற்கு அஞ்சி குயில் அவர்பால் செல்லாது. மனத்தைத் தூதாய் ஏகு எனலாம். இறைவனே ஆணவங்கொண்ட இந்த மனத்தைக் கடந்த கடவுள். மனேதீரராக விளங்குபவர். ஆகவே அவர்பால் மனம்செல்லாது என்று தலைவி பேசுவது சுவையான இடமாகும்.

தமிழ் தூதாகிச் செல்லுங்கால் வழிநடைக் களைப்பு வந்தால், வேறு இடையூறு வந்தால் என் செய்வது ? நூலாசிரியர் விளக்குகிருர். "தமிழே!" வேயுறு தோழிபங்கன் என்ற பதிகத்தை ஓதிச் சென்ருல் செல்லும் காரியம் வெற்றியாகும். நீ

திருவையாற்றில் காவிரி நதியை வழிவிடச் செய்தாய். பாலை நிலத்தை நெய்தல் நிலமாக்கினுய். சிவபெருமானே உனக்கு வழி நடைக் களைப்பு நீங்க அப்பருக்காகப் பொதிசோறு தந்தார். வழிமுறை கூறி யார்யாரிடம் தன்னைப் போகக்கூடாது என்பதைக் கருத்தோடு கூறுகிருள்.

"வீருகக்

கற்பார் பொருள்காணுர் காசுபணம் காணிலுனே
விற்பார் அவர்பால்நீ யேகாதே - கற்ருரை
எள்ளிடுவார் சொற்பொருட்கேட்டு இன்புருர் நாய்போலச்
சள்ளிடுவோர் தம்மருகே சாராதே, - தெள்ளுதமிழ்ப்
பாயிரமுன் சொன்னபடி படியாமல் குழறி
ஆயிரமும் சொல்வார்பால் அண்டாதே -

என்றும், முறையறிந்து படியாதவர், பேதையருக்கு அறிவூட்டுவோர், பொருளைக் காணதவர், அவையஞ்சுவோர், மீண்டும் படியாவதர், கற்ருேரைப் போற்ருதவர், கல்லாதவர், அன்பில்லாதவர், ஆகியோர்பால் ஏகாதே! அங்கே புசியாதே என்று அறிவுறுத்துகிருர். இங்குக் கற்கும் முறை கல்வியாளர் பெருமை, புலவர் - புரவலர் உறவுமுறை கல்வி பேணும் வகை முதலியகல்வியுலகச் செய்திகள் கவினுறத் தீட்டப்படுகின்றன.

"ஏகாதே! அங்குப் புசியாதே என்ற பகுதி உலகியல் வழக்க ஒழுக்கத்தைத் திறம்படக் கூறியதாகும்.

*அடி முதல் முடி வரை புனைவு :-*

மற்றுமோர் சுவையான பகுதி. தலைவி மதுரைச் சொக்கலிங்கப் பெருமானைத்திருவடி முதல் திருமுடி

ஈருகப் பாடிப்பரவும் இடம் பலாபோல்நிலாப்போல் இனிமையும் தூய்மையும் தருமிடமாக அமை கின்றது தலைவி இவ்வாறு கூறுகிருள். "இடைக் காடன் பின்போன மலர் அடிகளையும் ஒரு பாண்டி யனுக்காக மாறியாடிய திருத்தொடைகளையும், தர் அன்பன் ஒருவன் பொருட்டு அவன் பகைவனுடன் பொருந்த, கச்சுக்கட்டிய திரு இடையும், வந்திக் காகப் பிட்டுண்டு பசி தீர்ந்த திருவுதரமும், பன்றிக் குட்டிக்காகப் பாலருத்திய திருமார்பும், ஒருபாண்டி யனுக்காக மாணிக்கம் விற்ற திருக்கரமும், பாண்டிய அரசராகி, வேப்பமாலை அணிந்த தடப் புயமும், கரிக்குருவிக்கு உபதேசித்த கனிவாயும், தமிழ் வாழும்படி தந்த திருச்செவியும் மாமனுக வந்து வழக்குரைக்கையில் வணிகப் பெண்ணைத் தழுவித் துயராற்றிய திருக்கண்களையும், மண்சுமந்த மாமுடியும் கண்டு களி கூர்ந்து கசிந்து கசிந்து உள்ளுருகுவார் என்ற புனைவு அருமையாக உள்ளது.

இப்பகுதியில் கூறப்படும் திருவிளையாடல்கள் யாவும், மதுரையம்பதியிலேயே நிகழ்ந்தனவாகக் காட்டி, அப்படிப்பட்ட உறுப்புக்களையுடையார் ஆகவே மதுரைநகர்த் தலைவர் என்ற தொடர்பு காட்டிப் பேசுவது நல்ல கற்பனையாம். மற்றும் கண்ணுக்குச்சொன்ன விளக்கம் எண்ணி எண்ணி மகிழத்தக்கவை. நீரின் மட்டத்தைக் கரைகாட்டும், மலரின் சிறப்பை மணம் காட்டும். வள்ளலின் சிறப்பைக்கொடைகாட்டும். பொருளின் நிறையைத் தராசுகாட்டும். பொன்னின் தரத்தை உரைகல்

காட்டும். இவன் மனிதன் என்பதை யாது காட்டும்? கண்ணீர் காட்டும். ஆம். பிறர் துயர் கண்டு தான் துயர் உற்றதுபோல் துடிதுடித்து இரங்கி அன்பு செய்பவனே மனிதன். அதனைக் காட்டுவது துயரக் கண்ணீர். அக்கண்ணீர் சொரிபவனே மகன். பிறரெல்லாம் விலங்கேயாவர். இதனை வள்ளுவர் விளக்கினார். எவ்வாறு ?

"அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாள் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும் என்றார்.

இக்கருத்தை உள்ளடக்கித் தமிழ்விடு தூதாசிரியர் "பெண்ணீராள் கண்ணீர் பெருகத் தழுவித்தம் கண்ணீரால் ஆற்றியருள் கண்களும்" என்றார். இனிச் சில ஓசை நயம் கற்பனைமிக்க அடிகளைக் கேட்கலாமா ?

பண்சுமந்த பாட்டினுக்கும் பாவைதந்த பிட்டினுக்கும்
மண்சுமந்த சோதி மணிமுடியும் கண்சுமந்து
கண்டு களிகூர்ந்து

பாத்திறங்கொண்டே பதியாற் பாய்பசுவை பன்னிரண்டு
சூத்திரங்கொண்டே பிணித்த தூயோரும்

வீரியஞ் செய்து வினையொழியவே ராச
காரியஞ் செய்யுங் கவிதையே !

என்ற இடங்கள் இன்னோசையும் நல்ல கற்பனை யும் பொதிந்த இடங்களாகும். இவ்வாறு கலி வெண்பாவால் 268 கண்ணிகளைக்கொண்ட நூலாக இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட சொற் களால் இந்நூலை இயற்றியருளினார்

**தெய்வத்தமிழ் :-**

மதுரைக்குச் சிறப்பு-அங்கே தமிழ்ச் சங்கம் இருந்தது தமிழ்ச் சங்கத்தில் இறையனுர்-என்ற பெயரில் சிவபெருமான் புலவராய் இருந்து தமிழ் ஆராய்ந்தார். ஆகவே இவரை "ஏர்கொண்ட சங்கத்து" இருந்தார்-என்ருர். த டா த கை ப் பிராட்டியார் மதுரையில் தமிழரசு செலுத்தித் திக்கு விசயம் செய்து, ஆட்சி நடத்திஞர். உமாதேவிக்கு வேதம் கூறிய போது, பராமுகமாகக் கேட்கச் சிவன் சபிக்க, சினங்கொண்ட விநாயகர், வேத ஆகமச் சுவடியைக் கடலில் வீசிஞர். முருகக் கடவுள், மதுரையில் உக்கிரபாண்டியராகவும் உருத்திரசன்மராகவும் பி ற ந் து வண்டமிழ் வளர்த்தார். தேவார-திருமுறை ஆசிரியர்கள் நாளும் நற்றமிழ் பாடியே இறைவனைச் சொற்கு உருகச் செய்தனர். இத்தகு காரணங்களால் தெய்வங்களும், அடியார்களும் செந்தமிழாய் விளங்குவதாக இயைபு படுத்திப் புதிய முறையில் கடவுள் வாழ்த்தைத் தொடங்குகிருர். "எல்லாரும் நீயாய் இருந்தமையால் - சொல்லாரும் என் அடிகளே ! உ னை க் க ண் டு ஏத்தின் இடர் தீருமென்று பொ ா ன் ன டி க ளே புகலாகப் போற்றினேன்" எனப்பேசுகிருர். வ ண ங் கி வாழ்த்தும் கடவுளுக்கும், பாடும் பொருளுக்கும் தொடர்பு இருப்பதாகக் காட்டும் இம்முறை சிலப்பதிகாரத்தில் கண்டது.

பிறகு, சைவ சமயாசாரியர்களையும் அவர்கள் இயற்றிய அ ற் பு த ச் செயல்களையும் கூறி

அகத்தியர் தொல்காப்பியர் முதலான இலக்கண ஆசிரியர்களைச் சுட்டி இவர்களாகத் தமிழ் விளங்கு கின்றது என முடிக்கின்றார். தமிழின் தனியியல்பு களைச் சுட்டி விளித்துத் தமிழை அரசனாக உருவகம் செய்து தமிழின் பிறப்பு, எழுத்திலக்கணம் ஆகியவைகளைக் கூறி, பிள்ளைப் பருவங்களைச் சொல்லி, இயற்றமிழ் இலக்கணங்களை உருவகித்து, அரசாட்சிக்குரிய செங்கோல், குறுமன்னர் இயல்பு, நாடு-அரண்மனை, சேனை, படை, நாளோலக்கா முதலியவைப் பற்றி விளக்குகிறார்.

கடவுளினும் தமிழே உயர்ந்தது என்பார், மும்மூர்த்திகளும் முக்குணமே உடையார் ; நீயோ பத்துக்குணமுடையாய். உலகில் ஐந்து வண்ணங் களே உண்டு. உனக்கோ நூறு வண்ணங்கள் உண்டு, உணவுக்குரிய சுவைகள் ஆறே அவையும் நாநலத்தைப் பொறுத்தே அறியப் பெறும் உனக்கோ சுவைகள் ஒன்பதாம். அவை அழிவில்லாதவை. மானிடர்க்கு வனப்பு ஒன்றே. உனக்குரிய வனப்போ எட்டு அரசர்க்குப் பொருள் கோள் முறை மூன்று. உனக்குரிய பொருள்கோள் முறை எட்டு. உலகில் உள்ள சீர்கள் எட்டு உனக் குரிய சீர்களோ முப்பது சேரமான் அடித்தளை (விலங்கு)யைநீக்கியஉன்னடிக்குஏழு தளைஉண்டு. செந்தமிழாகிய உன்னை, வெண்பா என்பதும், எல்லா உகங்களிலும் இருந்து விளங்கிய உன்னைக் கலிப்பா (கலியுகப்பா) என்பதும், மருளை மாற்றி யருளும் உன்னை மருட்பா என்பதும், பத்துப் பொருத்தம் உடைய உன்னை விருத்தம் என்பதும் பொருத்தம் அற்றது என்றும் விவரிக்கிறார்.

இங்கெல்லாம் செய்யுளில் வரும் தளை, அடி, தொடை, சீர் முதலியன வெவ்வேறு பொருள் களில் சுவையாக ஆளப்படுகின்றன. அடுத்து, பொருட்செல்வத்திலும் தமிழே உயர்செல்வம் என்பதை விளக்குகிறார்.

சிந்தாமணி என்னும் இரத்தினம் உன் பெயரைப் பெற்றதாலே கொடை வளம் மிக்கதாக உள்ளது. பல அணிகளை உடைய உனக்கு வேறு அணிகளும் வேண்டுமோ ? பொன் உரைத்தாலும், கன்னமிட்டுக் கவர்ந்தாலும் குறையும் நீயோ உரைத்தாலும் அரசர்கள் கன்னமிட்டு (செவி யேற்று) கவர்ந்தாலும் குறையாமல் வளருகிறாய் என்று வருணிக்கிறார். பிறகு தெய்வங்களும் தமிழ் மொழியிடத்து ஆராக்காதல் கொண்டு விடுதல் அறியா விருப்பினவாக விளங்குதலைச் சுட்டுகிறார். சிவபெருமான் புலவராய்ச் சங்கத் தேயிருந்தது இறையனார் அகப் பொருள் என்னும் தமிழ் இலக்கணம் இயற்றியது, கலைமகள் கையில் புத்தகம் தாங்கியுள்ளமை, காஞ்சியில் ஒரு தமிழ்ப் புலவரோடு பச்சைமாமேணிப் பசுங் கொண்டல் பைநாகத்துடன் போனது, முருகன் அகத்தியருக்கு முத்தமிழ் புகட்டியது ஆகியவற்றைக்கூறிதேவதை களும் தெள்ளமுதாம் தமிழைத் தெவிட்டாமல் வாரியுண்ட செய்திகளை விவரிக்கிறார், இவ்வாறு பேராற்றல் உள்ள தமிழுக்குப் பெண்புத்தியால் பெரிதும் பேசுதல் பிழை எனத் தலைவி நயந்து கூறுகிறாள். பின்பு தமிழுக்கும் பெண்குலத்துக்கும் உள்ள முன்னுறவுகள் குறிக்கப்படுகின்றன.

"தமிழே! நீ ஆண்பனையைப் பெண்பனையாக்கியும் காரைக்காலம்மையாராகவும், திலகவதியாகவும் பிறந்தாய், இசைஞானியார் மகவாகியும், சிங்கி அடியார்க்கும் வனப்பகையாருக்கும் தந்தையாகி யும் பெண்களெல்லாம் வாழ நீ பிறந்தாய். என்னை நீ வாழச் செய்ய வேண்டாமா? என்றெல்லாம் பேசுகிருள். அடுத்து அன்னம், வண்டு, மான், ஆகியவை தூது செல்லும் திறன் இல்லாதவை எனவும் தமிழே தூதுரைக்கும் திட்ப நுட்பம் மிக்கத் திறனுடையது எனவும், தலைவி பேசுகிருள். பின்னர் மதுரை சோமசுந்தரருக்கும் தமிழுக்கும் உள்ள முன் தொடர்புகள் சில திருவிளையாடல் களின் வழி விளக்கப்படுகின்றது. இறுதியில்

> "எல்லாம் திருச்செவியி லேறும் படியுரைக்க
> வல்லாய்! உன்போல் எவர்க்கு வாய்க்கும்"

எனப் புகழ்ந்து "சுகா நந்நம் நல்க மறவாதே தூது சொல்லி வா" என முடிக்கிருள்,

III

**ஆசிரியர் பற்றியவை :**

தமிழர் தலைவிதியே, உயர்ந்த நூல்களுக்கும் ஆசிரியர்களுக்கும் செம்மையான வரலாறு இல்லாத தாகும். வள்ளுவரும், இளங்கோவும், கம்பரும் காளிதாசரும் இவ்விதிக்கு விலக்கில்லையென்ருல் தமிழ் விடு தூதாசிரியரும் அப்படித்தானு என்ற ஏக்கம் நமக்கு வருகிறது இது அடக்கமா? அறியா மையா ? வழக்கமா ? வேறுகாரணமா? என்று தெரியவில்லை.

**புலமை நலம் :-**

தொட்டாலும் கைமணக்கும், சொன்னாலும் நா மணக்கும் இந்த இன்பத் தமிழ் நூலை இணை இலாச்சைவத்தமிழ் நூலை இயற்றிய புலவன்,பெயர் தெரியாப் புலவனாகவும், சரியான காலம் சுட்ட முடியாத நிலையிலும் இருப்பது வியப்பிலும் வியப்பே. முழுமுதற்பொருளாம் கடவுளுக்கும் முத் தமிழ் மொழிக்கும் காலக் கணக்குண்டா? முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருள் இவை. இவைபோல் நூலாசிரியருக்கும் வரலாறும் காலமும் இல்லை. ஆனாலும், பைந்தமிழ்ப் பாட்டுக்களையே செல்வமாகப் போற்றிக் காத்து-பயின்று பரப்பிய ஏற்றமும் தோற்றமும் மிக்க தமிழ்ப்பெருங்குடியில்- வாழையடி வாழையென வந்த தமிழ்த் திருமகனே இந்த ஆசிரியர். ஆகவேதான் அச்சுப் பொறி இல்லாத காலத்தில், தமிழ்க் கல்வி ஏளனம் செய் யப்பட்ட காலத்தில் தமிழ்ப் படிப்புச் சோறு போடாது வறுமை நீக்காது என்ற நேரத்தில் இப் புலவன் முறையாகத் தமிழ் ஓதி தமிழ் நெறியறிந்து மரபு தெரிந்து மன்னு புகழ்ப் பாவலனாய் விளங்கு கின்றார். இவரது தமிழ்த் தூது ஓர் அரிய நூலகம் போல் விளங்குகிறது. இது சுட்டியுள்ள நூல்களை ஒருவர் படித்தாலே பெரும் பேராசிரியனாக ஒளிர முடியும். அவ்வளவு செய்திகளை இவர் வழங்கு கிறார். 31 திருவிளையாடல்களைக் குறிப்பிடுகிறார். 26 நாயன்மார்களைப் பற்றிப் பேசுகிறார். 23 அரிய தமிழ் நூல்களை அட்டவணை போல் நமக்கு அளிக் கிறார். 14 அரும்புலவர்களைப் பற்றியும் இயம்பு கிறார்.

தமிழ்ப்பற்று :-

இப்புலவரின் இலக்கண, இலக்கிய, சமய அறிவு பனிக்கடல்போல் பார்நிலம்போல் பரந்துள்ளது. இப்புலவரின் தமிழ்ப் பற்றுக்கு வேறு எவரையும் இணையாகச் சொல்ல முடியாது. பாரதியின் தமிழ்ப் பற்றும் பாரதிதாசனின் பற்றும் இவர் பற்றுக்கும் பற்ருது என்றே கூறலாம். தெய்வத் தமிழ் என்று பிற புலவர்கள் கூறினர். தெய்வம் போலும் தமிழ் என்பதே அவர்கள் கருத்து. இவரோ, தெய்வத் திற்கும் மேலானது தமிழ் என்ருர். "தென்மதுரைக் குள்ளிருந்த சொக்கர், உனக்கு உள் அன்ருே" என்றும், தேவரின் அமிழ்தத்தை விட மேலானது முத்தியளிக்க வல்லது என்ற பொருளிலும் "தெள்ள முதின் மேலான முத்திக்கனியே! என் முத்தமிழே" என்றும், மூவேந்தரும், பிற உலகங்களை வளைத்து தம் ஆட்சிக்கு உட்படுத்தியபோது தமிழே நீ அவர்களை வாகனமாகக் கொண்டாய். "மூவேந்தர் வாகனமா மூவுலகும் போய் வளைத்த பாவேந்தே" என்றும், தமிழாகிய உன்பொருட்டுச் சிவபெருமான் முதுகில் அடிவாங்கிய அப்பிரம்பே உனக்குச் செங் கோல் ஆயிற்று என்பார் "நெடுங்கோல வையை யிலென் நேசர் மேற்பட்ட கொடுங்கோல், செங் கோலாய் கொண்டாய் ! " என்றும்

" அரியா சனம் உனக்கே யானல் உனக்குச்
சரியாரும் உண்டோ தமிழே "

என்றும் கேட்கிருர். தமிழ் அரசு நிலவ வேண்டும். அதனல் தமிழர் நலம் பெறுவர் என்ற நல் நனவை அவர் அன்று கனவாகக் கண்டார். இது ஆங்கி

லேயர் ஆட்சிக்குக் கொடுத்த சாட்டையா? இல்லை தமிழ்ப்பாட்டை ஏத்தும் பாங்கா? இது காலம் சுட்ட உதவும் இடமாகவும் இருக்கலாம். அவ்வா ருயின் இவர் 19ஆம் நூற்ருண்டினர் என்ப தாகும்.

" இருந்தமிழே உன்னுல் இருந்தேன் இமையோர்
விருந்தமிழ்தம் என்ருலும் வேண்டேன் "

என்ற இந்த அழகிய பகுதியைக் கேட்காத செவி கேளாச்செவியேயாம். இங்கு அமிழ்தத்தைவிட தமிழே வாழ்விக்கும் என்பது பெறப்படும். மேலும் தமிழின் சுவைகண்டார் இங்கு அமரர் சிறப்புக் கண்டார் என்ற பாரதியின் கூற்றுக்கும், "செந்தமிழே! நறுந்தேனே செயலினை மூச்சினை உனக்களித்தேனே. நைந்தாயெனில் நைந்து போகும் என் வாழ்வு" என்ற பாரதிதாசனுர் கூற்றுக்கும் இந்த அடிகள் அடித்தளம் ஆயிற்று என்பதை அறிதல் வேண்டும். மற்றும் தமிழை "உயிர்க்கு உயிராய் நின்ருய் என்றும் இறைவனை விளிப்பதுபோல் விளிக்கிருர். "என்னடி களே!" என்று அழைக்கிருர். தமிழே! வைதாலும் வாழ்த்தாமே என்று கூறுகிருர். 'உன்கையால் ஆகாதது ஒன்று உண்டோ என்றும் பாராட்டுகிருர். மற்றும் வடமொழியையும் ஒப்பிட்டுத் தமிழின் மேன்மையை ஏத்திப் பரவுகிருர்.

வடமொழி நூல்கள் தமிழ் அரசிற்கு உறுதிச் சுற்றம் எனவும் வேதாகமங்கள் புரோகிதர் எனவும், இதிகாச புராணங்கள் சேனைகள் எனவும் உருவகிக் கிருர். தெய்வங்கட்கு வடமொழி விருப்பமா?

தென்மொழி விருப்பமா? என்ருல் விடை பின்வரு மாறு வருகிறது. மதுரையில் தமிழே! நீ திருஞான சம்பந்தரால் தமிழ் ஆகமமாக எழுதப்பட்டு வைகையில் இடப் பெற்ருய். சமணர் புனல்வாதம் செய்தபோது நீ ஏடகம் என்ற ஊரில் புனல் எதிரே ஏறிக்கரையேறிய வரலாற்ருல் உன் பெருமைதெரிய வரும். வேதமறையால் திருமறைக் காட்டில் கதவுகள் மூட, நீ அப்பர் திருவாய் மலரில் மணங் கமழ்ந்து திருக்கதவம் திறக்கச் செய்தாய். வடபுல அகத்திய முனிவரைச்செந்தமிழ் முனிவராகப்பெயர் பெறச் செய்தாய். பிரமன், (வேதம் செய்தவன்) திருவள்ளுவராக வந்து தமிழ்வேதம் செய்தார். சிவன் கல்லாகிக் கீழே நிற்க, நீயோ சங்கப் பொற் பலகையில் ஏறி வீற்றிருந்தாய் நான்கு மறைகளை யும் குதிரையாக்கினுய் என்று விவரிக்கும் பகுதி தமிழ் மாட்சியைத் தெரிவிப்பதாக உள்ளது.

இப்புலவர் 2000 சொற்களைக் கையாண்டாலும் தமிழ் மொழியில் ஒலிக்கும் எழுத்துக்கு மாருன எந்த வட எழுத்தையும் பயன்படுத்தவில்லை. வட சொற்களைக் கூடத் தமிழ் மரபுக்கு ஏற்றபடி மாற்றி எழுதுவது இவரது மொழிப்பற்றைக் காட்டும்.

**இலக்கணப்புலமை :**

இப்புலவர் நன்கு இலக்கணம் கற்றவர். ஆதலின் கவிதையாப்புத் தொடர்பான பல சொற்களும், சிலேடையாக வருகின்றன. பல அணிப்பெயர்கள் சித்திரக் கவிப் பெயர்கள் வரு கின்றன. தமிழை நாடாளும் வேந்தனுய்

உருவகம் செய்யுமிடத்தில் இவரது இலக்கணப் புலமை அறியவருகிறது.

உந்தித்தலத்தில் வளி தரித்து, வாக்கிலே கருப்பமாகி இதழ் முதலாகிய இடத்தில் நா முயற்சியால் பிறந்தான். முதல் எழுத்து 30 ஆக சார்பெழுத்து 247 ஆகப் பிறந்தான். 12 பருவம் கொண்டான். பள்ளிக் கூடத்தில் பிள்ளைகள் அசைத்துப் பேசும் பேச்சாம் தொட்டிலில் சிறுவர் கூடித் தாலாட்டினர். ஏட்டினில் எழுத்துத் தெரிய மஞ்சள் குளிப்பாட்டினர். மையிட்டனர். (கரிபூசல்). முப்பால் (திருக்குறள்) ஊட்டினர். இப்படி வளர்ந்து தமிழ்ப் பத்துப்பருவம் இட்டு (பிள்ளைத்தமிழ்) பிள்ளைகளை வளர்க்கும் தகுதி படைத்தாய் பெரிய பிள்ளையானாய் அணி 35 முதலிய அழகு பெற்று மாப்பிள்ளையானாய். செப்பலோசை முதலிய நான்கு ஓசையும் உனக்குப் பட்டத்துப் பத்தினியர். 103 பண்களும் உனக்குக் காதற் பாவையர். திருமணத்திற்குப்பின் நீ ஒன்பது சுவையாகிய புதல்வர்களைப் பெற்றாய். நாடகமாம் கொலுவில் வீற்றிருந்தாய். 18 வருணனைகளைப் பெற்றாய். பத்துத் திசையிலும் பைந்தமிழ் செல்லாத திசையே இல்லை. திசைச் சொற்கள் 17உம் உனக்குத் திறை செலுத்தும் சிற்றரசராவர்'' என்ற இப்பகுதியில் இப்புலவரது இலக்கண அறிவும் சிலேடை, உருவகம் பேசும் திறமும் காண்க,

**யாப்புப் புலமை :**

இலக்கண ஆசிரியர்களாகிய அகத்தியர், தொல்காப்பியர் பற்றியும் இறையனார் அகப்பொருள்

பற்றியும் கூறியுள்ளார். 19291 தொடை விகற்பங்களைக் கூறுவதால் இவர் தொல்காப்பியம் கற்றவர் என்பது தெரியவரும் கால்டுவெல் அறியாத தொல்காப்பியத்தை இவர் அக்காலத்தில் கற்றிருக்கிருர்.

இரதபந்தம், கூடசதுக்கம், சக்கர பந்தம், சுழிகுளம், மாலைமாற்று, முரசபந்தம் ஆகிய சித்திரக்கவி பற்றியும் தக்க இடத்தில் சிலேடையாகக்குறித்துள்ளமை இவர் யாப்பில் துறைபோகிய புலவர் என்பதைக் காட்டும்.

நூலறிவு :

"மூத்தோர்கள் பாடிய பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும் கேடில் பதினெட்டும் கீழ்க்கணக்கும்" என்பதால் சங்க இலக்கியம் நீதியிலக்கியம் கற்றவர்போலும். பஞ்ச காவியம் பட்டினப்பாலை பற்றியும் குறித்திருக்கிருர்.

"கொங்கு தேர்வாழ்க்கை யென்றெடுத்த செய்தியும்" என்பதால் குறுந்தொகை முதலான சங்க இலக்கியம் கற்றவர் என்பது கருதத்தகும். திருக்குறளின் சொல், அடி, முழுக்குறள் என்றவாறு இவர் தம் நூலில் பல இடங்களில் ஆள்கிருர்.

" கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக

என்ற சொற்குள்ளே என்பது இவர் முழுதாக ஆளும் இடங்களில் ஒன்று.

"தென்பால் உகந்தாடும் செய்தியெல்லாம்" என்ற இவரது அடி, திருவாசகத்தில் இருந்து எடுத்ததாகும்.

"வேயுறு தோளியென்று" சொல்வார்தம் காரியம் சித்திக்குமே" என்ற இடத்தில் தேவார அடியை அப்படியே பதிக்கிறுர்.

இவ்வளவு நூல்களையும், அடிகளையும் ஆளும் இவர் சேக்கிழார் புராணத்தைக் குறிப்பாற் கூட சுட்டவில்லையே என்று என் ஏழை நெஞ்சம் ஏங்கியது, "சொற்றமிழ் பாடுக எனச் சொன்ன மையால்" என்ற அடிகளைக் கண்டதும் மனம் ஆறுதல் அடைந்தது. இவர் பல திருவிளையாடல் களைக் குறிக்கிறுர். இவரது நூலுக்குத் திருவால வாயுடையார் திருவிளையாடற்புராணமே ஆதாரம். பரஞ்சோதியார் திருவிளையாடலை ஆதாரமாகக் கொள்ளவில்லை.

இரட்டையர், ஒட்டக்கூத்தர். வில்லிபுத் தூரார். ஔவையார், நக்கீரர், பட்டினத்தார் முதலி யோர் பாடல்கள் பற்றியும் செய்திகளைப் பற்றியும் கூறுகிறுர். இன்னும் அகத்துறை அறிவு இந்நூலா சிரியருக்குச் சாலப்பொருந்தி,கனியாய்க் கனிகிறது. பல நூல்கள் கற்றிருந்தால்தான் இந்த அளவு இனிமையும் உருக்கமும் வரும்

தலைவி, காமத்தீயால் வெம்பி வருந்தும்போது தமிழை நோக்கிப் பேசுகிறுள். "திருக்கொள்ளம் புதூர் வெள்ளத்தைக் கடந்த நீ, உன்னை வழிபட் டொழுகும் என் காம வெள்ளத்தைக் கடக்கச் செய்ய வேண்டாமா? நீ, சைனர்களைக் கழு வேற்றிஞய், காமனையும் கழுவேற்ற வேண்டாவா? சமணர் தந்த நஞ்சுணவை அமுதாக்கிஞய். எனது உணவும் இப்போது நஞ்சுதான். இதனை அமு

தாக்க வேண்டாவா? தீயில் இருந்தும் நீ வேக வில்லை என்னைச் சுடும் காமக் கடலில் ஆழாமல் காக்க மாட்டாயா? பனையின் வடிவத்தை மாற்றினுய். அப்பனையில் வசிக்கும் அன்றிலையும் வேறு பறவையாக மாற்றமாட்டாயா? பொதிய மலைச் சந்தணத்திலும், முத்திலும் அளைந்து தமிழே! நீ பிறந்தாய். தென்றலும் முத்தும் சுடாமல் காப்பாயாக. இறந்தவள் எலும்பைப் பாவையாக்கினுய். பொலிவிழந்த என்னையும் வனப்பு ஆக்காயோ ? என்று துன்பமாலை பாடு கிருள். இப்பகுதி அகத்துறை நலம் சான்றது.

இவர் வடமொழி நூலும் கற்றவர். வேதம், சுருதி, ஆகமம், பரதம், பதினெட்டுப் புராணம், சாத்திரங்கள் பற்றிப் பேசுவதால் வடமொழி அறிவு தெரிகிறது.

**சைவப்பற்று :**

இவர் சைவப்பற்று ஒழிய பிறபற்று அறி யாதவர். சிவனே முழுமுதற் கடவுள் என்று கருதுகிறவர். பலநாயன்மார்களின் வரலாற்றைஇட மறிந்து அழகுபடப் பேசுகின்ருர். திருஞான சம்பந்தரிடமும் சுந்தரமூர்த்தி சுவாமிகளிடமும் பெரும் பத்தி காட்டுகிருர். திருமந்திரம், சிவஞான போதம், பஞ்ச புராணம், ஓதித்தெளிந்தவர். ஆகம விதிகளை அறிந்து பூசாவிதிகளைத் தெளிவு படப் பேசுகிருர். மூவர் தேவாரத்தையும், திருக்கோவை யாரையும் கொண்டாடி இவையே தெய்வம் என்கின்ருர்.

இவ்வளவு சைவப்பற்று இருந்தாலும், புறச் சமயக் காழ்ப்பு இல்லை. சமணக் காப்பியமாகிய சிந்தாமணியைப்பற்றியும் குறிக்கிறார். திருமாலைப் பற்றியும் கண்ணனைப் பற்றியும் பேசுகிறார். "தாழ் பாய லாளரைநீ தானே தொடர்ந்தாயோ" எனவும்

"காக்கும் அரி புனைந்த கண்மலரும்" — எனவும்
"பூங்கமலக் கண்கொடுத்த புத்தேளும்"

எனவும், திருமால் பெருமை பேசுகிறார்.

இந்நூல் செய்யுள் யாப்பில், கந்தர்கலி வெண்பாப்போல் இனிய ஓசையோடு களிறுபோல் பீடு நடை போடுகின்றது. இப்புலவர் நூல் அமைப்பிலும், ஒரு புதுமை செய்கின்றார். தலைவன் உலாச் செல்லும்போது தலைவி கண்டு காதல் கொண்டதாகக் காட்டுவதே வழக்கம். இவரோ அவ்வாறு காட்டவில்லை. படிப்போர் ஊகிக்கும்படி விட்டுவிடுகிறார். இதில் மற்றுமோர் புதுமை உண்டு. பிற நூலாசிரியர் தூது சொல்லி வா என்றோ மாலை வாங்கி வா என்றோ கூறுவர் இவரோ இவ்விரண்டையும் இணைத்துக் கூறுகிறார். மற்றுமோர் சிறப்பு உண்டு. இந்நூல் தொனிப் பொருள் கொண்டது.

உயிராகிய தலைவி, இறைவனாகிய தலைவனைக் கலந்து, முத்தியாகிய ஆரா இன்பம் எய்தத் துடிப்பதாகத் தொனிப்பொருள் அமையப் பாடியிருக்கிறார். இந்நெறியை மணிவாசகரின் திருக்கோவையாரிலும் பாரதியாரின் குயிற் பாட்டிலும் காணலாம். ஆகவே இந்நூலாசிரியர் தமிழ்

மொழிக்குச் சீரிய அணி செய்தார் என்றே கூற வேண்டும். பொதியமலை பிறந்த தமிழ் உள்ள மட்டும் புலவோர் வாய் துதியறியும் பெருமை இவ்வாசிரியருக்கு உண்டு.

இந்நூலுக்கு உ. வே. சாமிநாத ஐயரின் அரிய குறிப்புரையும், கழக வெளியீட்டில் சங்குப்புலவரின் விளக்க உரையும் உண்டு.

நாம் இந்நூலை ஓதி உணர்ந்து இன்புறுவோமா?

# 9. பாரதியின் பாஞ்சாலி

முன்னுரை :-

தமிழ்க் காவியவானில் இருபெருஞ் சுடராக ஒளி வீசியோர் இளங்கோவடிகளும் கம்பனுமே யாவர். இவர்கட்குப்பின் கவிஞர்கள் பலர் விண் மீன் போல் தோன்றினர். ஆனல் துருவமீன் போல் துலங்கியோன் பாரதியேயாவான்.

39 வயதே வாழ்ந்த பாரதி, கதை, கட்டுரை, கவிதை ஆகிய முத்திறவகையாலும் மொழித் தொண்டாற்றினுன். ஆறு பெருங்கதை, 30 சிறு கதை, ‾50கவிதைகள் என்றவாறு தமிழ்த்தாய்க்கு அணி பல பூட்டினுன். கீதை, சில பிறநாட்டுப் பாடல்கள் ஆகியவற்றை மொழிபெயர்ப்புச் செய் தான். இவன் தொடாத பொருள் இல்லே. பாடாத துறையில்லே. பிள்ளேப் பருவம் முதல் பேசும் பொற் சித்திரமாகப் பல கவிதைகள் செய்தான். மணிக் கவிதைகள் மடைதிறந்த வெள்ளம்போல் பாய்ந்து பரவிப் பலன் தந்தன. இங்ஙனம், பாரதி சிறந்த கவிஞனுக விளங்கியதற்கு மூன்று காரணங்கள் உண்டு. 1. அவனது பன்மொழியறிவு 2 அவனது இசையறிவு. 3. அவனது படைப்பாற்றல். இந்த முப்பான் புள்ளி (ஆய்தம்) பாரதிக்குக் கிடைத்த ஒப்பிலா ஆய்தம் என்க. பாரதி பாண்டிச்சேரியில் வாழ்ந்த பத்தாண்டு வாழ்க்கை, தமிழ்த் தவ வாழ்க்கை. அதிலும் முதல் நான்காண்டுகள் பயன்

நிறை காவிய வாழ்க்கையாம். பாரதி அறுபத்தாறு, கீதை மொழி பெயர்ப்பு, கண்ணன் பாட்டு, குயிற் பாட்டு, பாஞ்சாலி சபதம் ஆகிய அரிய நூல்கள் இவ்வரிசையில் படைக்கப் பெற்றதாகக் கருத இடனுண்டு. குயிலும், பாஞ்சாலி சபதமும் காவியப் பண்பின. இவை, அவனது கடைசிக் காலத்துப் படைப்புமாகும். அவனது புகழ்சேர்ந்த பொற் கோயிலுமாம்.

இனி, பாஞ்சாலி சபதத்தின் தனித்தன்மை, குளுமை, கவியின் திறமை இவற்றைச் சற்றே காண்போம். மகாபாரதக் கதைக் குறிப்புக்கள் சங்கச் செய்யுட்களில் வருகின்றன. புறநானூறு, கலித்தொகை, சிறுபாண், பெரும்பாண், சிலம்பு, ஆகிய நூல்களில் இக்கதைக் குறிப்பைக் காணலாம். சங்கப் புலவர்களில் பாரதம்பாடிய பெருந்தேவனாரும் ஒருவர். பாரத வெண்பா, வில்லி பாரதம், அரங்கநாதர் பாரதம், நல்லாப்பிள்ளை பாரதம் ஆகியவை வழக்கில் இருந்தன. ஆருவது கவியாகப் பாரதி பாஞ்சாலிசபதம் செய்வானேன்? முன்னூல்கட்கும் பாரதியின் இந்நூலுக்கும் உள்ள இயைபு என்ன? இதில் பாரதி எங்கு ஒளி வீசு கிறான்? இவற்றிற்கு விடை காணல் வேண்டும்.

இக்கதை, மகாபாரதத்தில் ஓர் இடைவெட்டே யாம். இராச சூயயாகத்துக்குச் சென்று திரும்பிய துரியோதனன், பொறுமையால் சாம்பிப் புழுங்குவது தொடங்கி, பாஞ்சாலி சபதமிடுவதுடன் பாரதி நிறுத்திக் கொள்ளுகிறான். இத்துணைப்பேருக்குப்

பின் இடைவெட்டுக் கதையைப் பாரதி ஏன் எடுத்தான்? இரு காரணம் உண்டு. ஒன்று, பாரதி, தன்காலத்தில் வெளிப்படையாகச் சொல்லிய விடுதலையுணர்ச்சியைக் காவிய வடிவிலும் வடித்துக்காட்ட அவாவினான். இரண்டு, பெண் விடுதலையை வற்புறுத்த இது வாய்ப்பாயிற்று. மேலும் இரு துணைக்காரணம் உண்டு. எளிய நடையில் காவியம் செய்ய எண்ணினான். வியாசர் பாரதத்தை அவர் கூறிய முறையில் தமிழ்ப்படுத்த விரும்பினான், அங்ஙனமாயின், பாரதி முன்னூல்களிலிருந்து வேறுபடவில்லையா? வாய்க்கால் நீர் போல் ஒரேபடித்தாய் ஓடினானா? இல்லை. இல்லை. பாரதி முன்னூலாரோடு உடன்பட்ட இடம், திரிபுற்ற இடம், அறவே விட்டுவிட்ட இடம், தானே படைத்துக்கொண்ட இடம் என நால் வகையாலும் தனது காவியத்தை நடத்துகிறான். சில சான்றுகள் போதுமே!

**உடன்பட்ட இடம் :—**

அ) பொறுமையால் கன்றிய துரியோதனன், பாண்டவரைப் போரலோ, வஞ்சத்தாலோ, அழிக்க வேண்டுமெனச் சகுனிபால் கேட்டல்.

ஆ) பாண்டவர்பால் முதலில் தூது செல்லும் விதுரன், துரியோதனாதிகளின் சூதாட்ட வஞ்சனையைப் பாண்டவர்கட்குக் கூறுதல்.

இ) திரௌபதி அரசவையில் கேட்ட கேள்வியை விகர்ணன் உட்கொண்டு இரங்கி நியாயம் பேசல்.

**தீர்புற்ற இடம் :—**

அ) பாண்டவர்கள் சூதில் பொருள் இழந்த பின் தங்களையே பந்தயப் பொருளாக்குமாறு துரியோதனன், வில்லியில் தூண்டுகிருன். பாரதியில், சகுனி தூண்டுகிருன்.

ஆ) திரௌபதையைச் சபைக்கு அழைத்துத் துரியோதனன் தேர்ப்பாகனுக்கு (பிராதிகாமி) கட்டளையிட அவன் பாஞ்சாலியைக் காணமலேயே திரும்பி அவனுகவே திரௌபதை கூற்ருக இட்டுக்கட்டிக் கூறியதாய் வில்லிபேசல். பாரதி பாஞ்சாலி சபதத்தில் தேர்ப்பாகன் அரச கட்டளைப் படி இருமுறை பாஞ்சாலியின் இருக்கை வந்து அவள் கூறியதைத் துரியோதனனுக்குக் கூறுகிருன்.

இ) துச்சாதனன், திரௌபதியின் கையைப் பிடித்து இழுத்து மன்றிற்கு வந்ததாக வில்லி கூறியிருப்பவும், பாரதியோ, "மைகுழல் பற்றி இழுத்தான்", எனக் கூறினுன்.

ஈ) வில்லியில், பாஞ்சாலிதான் முதலில் சபதம் இடுகிருள். பாரதியோ பாஞ்சாலியின் சபதத்தை இறுதியில் வைத்தார்.

**அறவே விட்ட இடம் :-**

அ) துச்சாதனன் அரசவைக்குத் திரௌபதையை இழுத்தபோது அவள் காந்தாரியின் துணையை நாடுதல்.

ஆ) பாஞ்சாலி ஆடை உரியப்பெற்று அவமானப்படுத்தப் பெற்றகாலை வீமன் துரியோதனுதிகளை உடன் கனன்று போருக்கு அழைத்தல்.

இ) துச்சாதனனை நோக்கி, பாஞ்சாலியைத் தன் துடையில் இருத்துமாறு துரியோதனன் கூறிய போது பாஞ்சாலி சாபமிடல். இவை பாரதியில் இல்லை

**தானே படைத்துக் கொண்டவை :-**

அ) அத்தினபுரியை நோக்கிவரும் பாண்டவர்கள். கதிர்மறைவுகண்டு இடையில் தங்கிய போது, அர்ச்சுணன், பாஞ்சாலியைத் தனித்து அழைத்துச் சென்று மறையும் கதிரைக்காட்டி மகிழ்தல்.

ஆ) திருதராட்டிரனை நல்லவனாகப் புனைந் திருத்தல்.

இ) சூதுக்குப் பாண்டவரை அழைக்கக் கூடாதெனவும், பாஞ்சாலியை மன்றுக்கு அழைத்தல் பிழையெனவும் விதுரன் துரியோதன னுக்குக் கூறும் சீரிய அறிவுரைகள் முழுதும் பாரதியின் தனிப்படைப்பு.

ஈ) திரௌபதியைப் பற்றிய கவியின் புனைவு. மன்றிற்கு அவளை அழைத்தபோது உலகில் உண்டான குழப்பங்களைக் கூறிய இடம், திரௌபதை — தேர்ப்பாகன் உரையாடல், அவள் மன்றில் பெரிதும் வழக்கிடுதல், வீட்டுமன் சமாதான உரை இவை புதியன ; புனைவு செய்தன.

உ) பாஞ்சாலியைப் பணயமாக வைத்த தருமனை வீமன் இகழ்ந்து கடிந்துரைத்தல், அவனை அர்ச்சுணன் கண்டித்தல்.

ஊ) திரௌபதை கண்ணனைச் சரணடைந்து பாடிப் பரவும் விரிவு.

எ) வீமன், அர்ச்சுணன், பாஞ்சாலி என இவ்வரிசையில் சபத உரைகளை அமைத்தல்.

மேலே காட்டிய விட்டஇடம், புதியன படைத்தல் ஆகியவற்ருல் பாரதியின் தனித் தன்மையும் கவியாற்றலும் விளங்கும். ஒரு தாய் தந்த பொன்நகையை, மகள் உருக்கிப் புதுக்கிப் புது அணி ஆக்குதல் போல, பாரதி பாஞ்சாலி சபதத்தைப் புதுப்படைப்பாகவே புடமிட்டு ஆக்கினர். இவ்வகை மாற்றங்கட்குச் சில காரணங்கள் இல்லாமலில்லை.

**பெண் விடுதலை :-**

பாரதி படைக்கும் பாஞ்சாலி, வெற்றுச் சடங்கு கட்கு ஆட்படாத வீரமகள் ஆகவே காந்தாரியின் துணையை நாடவில்லை. வீமனின் வீரப் பேச்சை வேண்டுமென இடம் மாற்றுகிருர் பாரதி. பாஞ்சாலி துகிலிழந்ததைவிட, தருமன் அவளைப் பணயமாக்கியதல்லவா இத்துணைக்கும் காரணம் ? ஆகவே வீமன், அண்ணன் தருமன் செயலை வீறுகொண்டு தாக்கிக்கண்டிக்கிருன். இங்கு கூட பாரதி, பாஞ்சாலியைப் பாரதமாதாவாகவே மனத் துள் கற்பனை செய்து கொள்கிருர். ஆகவே வீமன் இங்கு மட்டுமே கடுமொழி பேசுகிருன். விடுதலைப் பெண்ணின் விவேகச் செய்திகளை விரிக்கும் பாரதியார், பாஞ்சாலியைத் துரியோதனனின் மடியில்இருக்குமாறு கேட்பதை எங்ஙனம் ஏற்பார்

ஆகவே மூலக் கருவையே மாற்றி இடம்விட்டு, காலக்கழிவோடு, வீமன் சபதப் பேச்சில் ஓடுகிற ஓட்டமாக விட்டுச் செல்கிருர். பாஞ்சாலியைத் துச்சாதனன் கைதொட்டு இழுப்பதாக மூலத்தில் இருப்பவும் பாரதி "மைகுழல் பற்றி இழுத்தான்" என மாற்றம் செய்ததற்கும் காரணம் என்ன ? பாரதி பெண்பெருமை பேசுபவர் என்பதன்றே? தேர்ப்பாகனே பாஞ்சாலியைச் சந்திக்காமல் தாஞ கவே அவள் வர மறுப்பதாகப் படைத்து மொழிவ தாக மூலநூல் பேசும் பாரதி, பாஞ்சாலியின் மதி நுட்பத்தைக் காட்டவே, இக்காட்சியை அறவே மாற்றுகிருர். பெண்ணின் பெருமை காட்டவே பாஞ்சாலியை முதலில் சபதம் கூறுமாறு பாரதி செய்ததும், இதஞலேயே. மேலும் நூற் பெயர்க் கேற்றவாறு, முடிக்கும் இடம் அங்ஙனம் அமைவது சாலப்பொருந்தும்.

**கவிஞனின் தனித்தன்மை :-**

மேலே கூறிய பகுதிகளில் பாரதியின் தனித் தன்மையும் விளங்கிற்று மேலும் பல மாற்றங் களைச் செய்த இடங்களிலும் இது நன்கு பொலி கிறது. திருதராட்டிரனே மிக நல்லவஞகப் புனே கிருர். விதுரன், விகர்ணன், வீட்டுமன் இவர்களே யும் நல்லவர்களாகவும் சொல் வல்லவர்களாகவும் காட்டி முன்நூல் ஆசிரியர்கள் காட்டாத வகையில் பெருஞ்சிறப்பாளர்களாகப் புகழ்கிருர். அர்ச்சுனன், பாஞ்சாலிக்குப் பாயிருள் பருகும் பருதியின் காட்சி யைக்காட்டி மகிழும் இடம் மிகமிக இனியவருணனே யல்லவா? திரௌபதை கண்ணனே ஏத்திப் புகழும்

இடமும் வில்லியில் விரிவாக இல்லை. ஒரே பாட்டுத் தான் உண்டு இங்கோ இது பலபடி விரிகிறது. இதனால் பாரதி, தான் கண்ணதாசனாக விளங்கு வதைக் காட்டி விடுகிறார். வீமன், பாஞ்சாலி இருவரும் சூள் உரைக்கும்போது பராசக்தி மேல் ஆணையிடுவது கவிஞனே சக்திதாசனாக இருப் பதால் அல்லவா? இன்னும் பல்வேறு இடங்களில் நாட்டு விடுதலையையும் குறிப்பாகவும் வெளிப்படை யாகவும் காட்டிவிடும் பாங்கைக் காண்கிறோம்.

**நாட்டு விடுதலை :-**

கீழ்வரும் இடங்களில் நாட்டு விடுதலையைப் பாத்திரங்களின் வாயிலாகக் கவி வெளியிடுகிறார்.

அ) "போரிடச் செல்வோமடா — மகன் புலைமையும்,
தந்தையின் புலைமைகளும் யாரிடம் அவிழ்க்கின்றார் ?
இதை எத்தனை நாள் பொறுத்திருப்போம்"

என்று வீமன் அர்ச்சுனனிடம் கூறும் இடத்திலும்,

ஆ) "நெறியிழந்தபின் வாழ்வதிலின்பம் நேருமென்று
நினைத்திடல் வேண்டா"
"புல்லியர்கட்கு இன்பம் புவித்தலத்தில் வாராது"—

என்ற விதுரன் பேச்சிலும்,

இ) "மீண்டும் எமையடிமை — செய்தாய்
மேலும் பொறுத்திருந்தோம்"

என்ற வீமன் உரையிலும்,

ஈ) "கட்டுண்டோம் பொறுத்திருப்போம் காலம் மாறும்
தருமத்தை அப்போது வெல்லக் காண்போம்
தனுஉண்டு காண்டீவம் அதன்பேர்"

என்ற அர்ச்சுனன் கூற்றிலும் விடுதலை பற்றிய குறிப்பு மொழிகள் உண்டு. இங்கு, காண்டீவம் என்பது காந்தியாரைக் குறிக்குமோ ?

பாத்திரங்களின் மூலம் விடுதலையைக் குறிப்பில் பேசிய பாரதியார், வெளிப்படையாய்ப் பேசிய இடங்களும் உண்டு.

"கோயிற் பூசை செய்வோர் சிலையைக்கொண்டு
விற்றல் போலும்
வாயிற் காத்து நிற்போர் வீட்டை வைத்திழத்தல்
போலும்
தேயம் வைத்து இழந்தான் *சீச்சீ*—சிறியர் செய்கை
செய்தான்"

எனத் தருமன் செய்கையை எவ்வளவு உணர்ச்சியோடு, எவ்வளவு வெறுப்போடு கண்டிக்கிறார்?

'ஆட்டு மந்தையாம் என்று உலகை அரசர் எண்ணி ...
விட்டார்

........................................................................

நாட்டுராச நீதி மனிதர் நன்கு செய்யவில்லை"

இங்கெல்லாம் ஆங்கிலேயர் ஆட்சியின் சீர்குலைவு தெளிவாய்க் காட்டப்படுகின்றது. குறிப்பாய்க் கூறிக் கண்டிக்கும் இடம் இரண்டு மட்டும் காட்டுவோம்.

"ஈயத்தைப் பொன் என்று காட்டுவார் மன்னர்
இப்புவி மீதுளராமன்றோ?"

இது வெள்ளையரின் குள்ள மதியைக் காட்டியது.

"ஊரவர்தம் கீழ்மை உரைக்கும் தரமாமோ?
வீரமிலா நாய்கள் விலங்காம் இளவரசன்
தன்னை மித்துத் தராதலத்தில் போக்கியே
பொன்னையவள் அந்தப் புரத்தினிலே சேர்க்காமல்
நெட்டை மரங்களென நின்று புலம்பினர்
பெட்டைப் புலம்பல் பிறர்க்குத் துணையாமோ?"

இங்கு, அருமை குலைத்த பாஞ்சாலி — பாரதமாதா. விலங்காம் இளவரசன் — வெள்ளையர். வீரமிலா

நாய்கள்—விடுதலை உணர்விலாப் பாரத மக்கள். இவ்வாறு உள்ளுறை வைத்துப் பாடுகிறார் பாரதி.

**கவிதைக் குளுமை :**

இனி, பாரதியின் கவிதை, குளிர்தரு தருவாக ஓங்கி வளர்ந்து இன்பம்தரும் இயல்பைக் காண் போம்.

சொற்படைப்பு, வழக்குச்சொல், இனிய ஓசை, பாத்திரப்படைப்பில் சிறப்பு, கற்பனைவளன், இவை பாரதிக்குக் கைவந்த கலைகளெனக் கூற லாம்.

இழிஞன், அடிமைச்சி, தொண்டச்சி — இவை பாரதியின் படைத்து மொழி கிளவியாம். கெலித்திட்டான், கொக்கரித்து, சின்னச்சகுனி— இவை வழக்குச் சொற்கள். "சிறுமைக்குத் தலை கொடுத்ததொண்டர்," "என்னரும் நற்குணம் சான்றவன்", "பொய்யில் பண்ணியகாய்", இத் தொடர்கள் எளிய ஆனால் வேகமுடன் பிறந்த சந்தமொழி.

> " கண்ணனுக்கு ஆருயிர்த் தோழனும்; எங்கள்
> கண்ணிலும் சால இனியவன்
> வண்ணமும் திண்மையும் சோதியும்பெற்று வானத்
> தமரரைப் போன்றவன் "

என்ற விசயனைப் பற்றிய பாடலின் ஓசையில் என்ன இனிமை ! என்ன எளிமை !

பாரதி, பாத்திரப் படைப்பினால் மேம்பட்டு விளங்குகிறார். துச்சாதனனை இவ்வாறு வருணிக் கிறார்.

"இவன் தீமையில் அண்ணனை வென்றவன் கல்வி
எள்ளளவேனும் இலாதவன் கள்ளும்
ஈரக்கறியும் விரும்புவோன் பிறதெவ்வர் இவன்றனை
அஞ்சுவார் தன்னைச்
சேர்ந்தவர் பேயென்று ஒதுங்குவார்."………

" புந்தி விவேகமில்லாதவன் புலிபோல உடல்வலி
கொண்டவன்

……………………………………………………

கள்ளின் சார்பின்றியே வெறி சான்றவன்,
அண்ணன் எது சொன்னாலும் மறுத்திடான் "

இவ்வாறு தெளிவாக உறுதியாகப் பாத்திரங்களை வருணித்து உலாவ விடுகிறார். மேலும் பாரதியிடம் உருவக — உவமை அணிகள் ஊற்றெனச் சுரக்கக் காணலாம்

**உருவகங்கள் :**

" ஐவர் சினத்தின் அழலை வளர்க்கின்றாய் "
" உயிர்த் தணி சுமந்திடு செய்யமுதை ",
"நிலத்திருவை" இவை நல்ல உருவகங்கள்.

**உவமைகள் :**

" வேள்விப் பொருளினையே புலைநாயின் முன்மென்றிட
வைப்பவர்போல்"
" செருப்புக்குத் தோல்வேண்டியே இங்குக் கொல்வரோ
செல்வக்குழந்தையினை "

இவை சீரிய உவமைகளல்லவா ? இவண், பாரதியின் வடமொழிப் பயிற்சியும் தெரிகிறது. இவை வேதத்தில் கண்டவை

" புண்ணிடைக் கோல்கொண்டு குத்துதல் நின்னைப் போன்றவர் செய்யத் தகுவதோ" இங்கு, கம்பரின் நிழல் பாரதியிடம் படிவதைக் காணலாம்.

"சிறுநாயொன்று தேன் கலசத்தினை எண்ணித் துன்றும் உவகையில் வெற்று நாவினைத் தோய்த்துச் சுவைத்து மகிழ்தல் போல்" இங்கு, குறுந்தொகை (பாடல் 60) உவமையின் சாயல் திரிபுடன் வரக்காணலாம். இதனுல் பாரதியின் பன்னூற் பயிற்சி தெரிகிறது.

கண்ணன் அருளால் பாஞ்சாலிக்குத் துகில் வளர்ந்ததைக் கூறும் கவி, ஐந்து உவமைகளை அடுக்கிக் கூறினுர்.

இங்ஙனம், பாஞ்சாலி சபதத்தில் மட்டும் 90க்கும் குறையாத உவமை வண்ண ஓவியங்கள் ஆங்காங்கே தீட்டப்பட்டுள்ளன.

முடிவுரை :

ஆகவே, பாரதி, கவியுலகில் பாடிவரும் நிலா. புலவர்க்கோ கொழுத்துப் பழுத்த பலா. தமிழுக்கோ புதுமை படைத்த பொற்ருய். புகழ் சேர்த்த அரண். தமிழ் இருக்கும் வரை அவர் புகழ் இருக்கும்—கூட அவர் நினைவிருக்கும்.

## 10. புதினங்கள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் "புதினம்" ஒரு புதிய முயற்சி ஆகும். இருபதாம் நூற்றுண்டின் தமிழ் உரைநடை, இப்புதினத்தால் நல்ல வளம் பெற்றது. எழுதப்படிக்கத் தெரிந்த யாவரும், அறிவு பெற, புதினம் கருவியாய் நின்று பயன்பட்டது. பண்டிதர்களின் கையில் சிக்கிக் கடின நீர்போல் இருந்த தமிழ் உரைநடையைப் புதினம் என்ற மருந்து மென்மைப்படுத்தியது.

**உரைநடை :-**

தமிழ்மொழியில், உரைநடைக்குச் சிறப்பான இடம், முன்னர் இல்லை. கற்பனைக்கும், நினைவில் தங்குவதற்கும், கவிதை மொழியே ஏற்றது என்று கருதினர். ஆகவே சமயம், மருத்துவம், சோதிடம், இன்பியல் ஆகிய பலவும் கவிதைகளாகவே இருந்தன. ஆயினும் சிலப்பதிகாரம், தகடூர் யாத்திரை, இறையனுர் களவியல் உரை ஆகிய வற்றில் உரைநடைக்கு உரிய மாதிரிகள் காணப் படுகின்றன. அவையும் கவிதைப் பண்பின் நெகிழ்வே தவிர, இன்றைய உரைநடையோடு ஒத்தவையல்ல.

உரையாசிரியர்கள் காலத்தில் தான், (கி. பி. 12 - 14) உரைநடை ஒருவாருக உருப்பெற்றது. தொல்காப்பியர் காலத்திலும் உரைநடை இருந்த தாக அறிகிறோம் (தொல் - செய்யுள் - சூ 171).

ஆனால் புதினம் போன்ற நிலையில் எதுவும் இல்லை. தமிழ் போன்ற செழித்த மொழியில் கதைகளே இல்லை என்று கூற இயலாது. அவை யாவும் வாய்மொழியாய் வழங்கின; உரைநடை வடிவில் நடமாடவில்லை. அல்லது உருப்பெற்று ஆடிப் பெருக்கு வெள்ளத்தால் கொள்ளைபோய் இருத்தல் கூடும். இவ்வாறு தமிழ்க்குழவி, உரைநடை என்ற பாதையில் தள்ளாடித் தளர்நடை போட்டபோது, புதினம் என்ற நடைவண்டி விரைந்து நடக்கும் வலிமையைத் தந்தது.

**புதினத்தோற்றம் :**

இப்புதினம் இலத்தீன் மொழியில் முதலில் தோன்றியது. அது "காதல்" என்ற ஒரு உணர்ச்சியை மட்டுமே கூறியது. கி. பி. 1742இல் ரிச்சர்ட்சன் சோசப்பு ஆண்ட்ருசு (Joseph Andrews) முதல் புதினத்தை வெளியிட்டார். புதினம் மேலைநாட்டில் 17ஆம் நூற்றுண்டிலேயே வளரத் தொடங்கினுலும், இந்தியப் பெருநிலத்தில் 20 ஆம் நூற்றுண்டில் தான் கால் கொள்ளத் தொடங்கிற்று.

**புதின வளர்ச்சி :**

இராமன் கதை, பாரதக் கதை, விக்ரமாதித்தன் கதை, தெனுலிராமன் கதை, மதனகாமராசன் கதை, பஞ்ச தந்திரக் கதை ஆகியவை இந்திய நாட்டுக் கதைகளாக விளங்கின இவை புதினத் தின் கூறுகளைக் கொண்டவையே. பிரதாப முதலியார் சரித்திரம், கமலாம்பாள் சரித்திரம்

ஆகியவை புதினத்தில் புதிய அமைப்பைத் தோற்றுவித்தன. ஆங்கிலக் கல்வியின் பயனுக, தாகூர், பாரதியார், மறைமலை அடிகள், கல்கி ஆகியோர் புதினப் படைப்பில் முனைந்து புனைந் தனர். ''அகோவாரும் பிள்ளாய்'' என்பதையோ, "வாசகரின் மன்னிப்போடு, பூங்குழலியைக் கொள்ளிடத்தில் விட்டுவிட்டு வந்தியத் தேவனை வரவேற்கப் போவோம்'' என்ற மாதிரியிலோ எதுவும் இக்காலப் புதினங்களில் இருப்பதில்லை. இன்றோ, கதை உறுப்பினருக்கும் படிப்போருக்கும், நேரடியாகத் தொடர்பு எழுகிறது. நாடகம் போல் கதை, கண்முன் நிகழும். இவ்வாறு, புதின அமைப்பு முறையில் மாற்றம் நிகழ்ந்துள்ளது.

புதினம், சிறுபுதினம், சிறுகதை இவற்றின் இயல்புகளைக் காண்போம். புதினம் என்ருல் என்ன என்ற இந்தக் கேள்விக்கு விடையளிப்பது கடினம். புதினம் அல்லது நாவல் வாழ்க்கையில் காணப்படும் ஆழ்ந்த நிலையான உணர்ச்சிகளின் போராட்டங்களை விளக்கல் வேண்டும். அதன்மூலம் அவ்வுண்மையை உணரச் செய்தல் வேண்டும். இவ்வாறு இருப்பதே உயர்ந்த புதினமாகும். ஒரு இலக்கியம் அல்லது ஒரு காப்பியம் தருகிற பயனைப் புதினம் தரவேண்டும் என்பது கருத்து.

இப்புதினத்திற்கும் இலக்கியத்திற்கும் என்ன வேறுபாடு? காப்பியம்—கவிதை மொழியில் காணப் படுகிறது நாவல், உரைநடையில் உள்ளது. காப்பியத்தில் தலைவன் தலைவியர் உயர்பண்பு மிக்கவராகவே இருப்பர். நாவலில் எத்தகைய

குணம் உள்ளோரும் உறுப்பினராக இருக்கலாம். காப்பியத்தில் புனைவுரை மிகுதி. நாவலில் அது குறைவு. இதுவே இக்கால நாவலின் அமைப்பு.

**புதினம், சிறுபுதினம், சிறுகதை விளக்கம் :-**

வேறு வகையாகச் சொன்னால், உலக அநுபவங்களைப் பெருவாரியாகப் பெற்றிருக்கிற பேரிளம் பெண்ணோடு காப்பியத்தை ஒப்பிடலாம். தாய்மையின் தலைவாயிலில் கூடக் காலெடுத்து வைக்காத ஆனால் உலகியல் அநுபவங்களை அடைந்திருக்கின்ற, மடந்தைப் பருவத்தாளைப் புதினத்திற்கு ஒப்பிடலாம். சிறு புதினம், சிறுகதை இவ்விரண்டிற்கும் இந்த விதி பொருந்தி வந்தாலும் அமைப்பில் வேற்றுமையுண்டு. புதினத்தில் சில உணர்ச்சியின் போராட்டங்களைச் சில உறுப்பினரைக்கொண்டு, சில சொற்களாலே வரைந்து விடுவர். ஆகவே காப்பியப்புலவன், பேர் உலகைக் காட்டுகிறான். புதின ஆசிரியன் ஒரு சிற்றூரைக் காட்டுகின்றான். சிறு புதின ஆசிரியன் ஒரு வீட்டை மட்டுமே காட்டுகிறான் என்று கூறலாம். சிறு கதையில் ஒரே ஒரு உணர்ச்சியின் பதிவே பயனாக அமையும். தாய்மை, மொழிப்பற்று, தியாகம் இவை போன்ற ஏதேனும் ஒன்றை வலியுறுத்துவதாக அமைக்கலாம். ஆகவே சிறுகதை என்பது ஒரு வீட்டின், ஒரு குறிப்பிட்ட நூலக அறையையோ, உண் இடத்தையோ காட்டுவது போலாகும் எனலாம். ஆனால் இன்று சில ஆசிரியர்கள் ஒரு வீட்டின் கழிவிடத்தைக் காட்டுவது போல் காமம், திருடுதல், பரத்தமை ஆகிய தீய

பண்புகளை அளவு விஞ்ச விளக்கி, அதுவே சரி யாகும் என்று வாதிடுகிறுர்கள். இவ்வாறு பொருளையும், அமைப்பையும் பொறுத்துப் புதினம் பெயர் பெறுமே அன்றி, சிலர் குறிப்பிடுதல் போல், வெறும் பக்கத்தைப் பொறுத்தோ, படிக்கும் நேரத் தைப் பொறுத்தோ பெயர் பெறுதல் இல்லை. ஏனெனில் பக்கம் அளவுதோறும் மாறுபடும். காலம் படிப்போர் பயிற்சிக்கேற்ப மாறுபடும்.

**சமுதாய அடிப்படை :**

இந்தப் புதினத்தைப் பலவேறு கோணங் களிலிருந்து பலவாறு பகுக்கலாம். கதையின் கருவைக்கொண்டு மூன்று வகையாகப் பிரிக்கலாம். சமுதாய அடிப்படையில் அமைவது ஒன்று. அஃதா வது, டாக்டர். மு. வ. வின் கள்ளோ-காவியமோ'' ''கயமை''; காண்டேகரின் 'எரிநட்சத்திரம்', 'இருதுருவம்' ; கல்கியின் 'அலைஓசை' ஆகியவை இந்த வகையைச் சேர்ந்தவை. இப்படி அமைக்கும் போது, மேற்போக்கான சமுதாய அமைப்புகளைச் சுட்டுவதைவிட, ஆழமான உணர்ச்சிகளை ஊடாட விடுதல் நலம்.அஃதாவது, கட்சிக் கருத்துக்களையோ வலுவின்றி எழுதப்பட்ட மூட நம்பிக்கையோ மூலப்பொருளாகக் கொண்டு எழுதுவது அத்துணை சிறப்பில்லை. ஏனெனில், அவை நிலையான கருத் துக்கள் ஆகா. ஆகவே சமுதாயத்தில் காணப்படும் இல்லறப் பூசல், பரத்தமை கண்டிப்பு, திருட்டுத் தீமை, தொழிலாளி முதலாளி உறவு, இவை போன்ற பொதுக்கருத்துக்களைக் கருவாகக் கொண்டு சமுதாய எழுச்சிக்காகவும், வளர்ச்சிக்காகவும்

எழுதப்படும் புதினங்களே நன்கு வரவேற்கப்படும். மேலும்,ஒரு தனிமகனின் வெற்றி தோல்வியையோ, ஒரு கூட்டத்தாரின் வாழ்வு தாழ்வுகளையோ, விளக்குவது இந்த வகையைச் சாரும். ஒருவரின் குணநலம், பழகுமுறை, வளர்ப்பு, பரம்பரைக் குணம் இவற்றைப் பட்டாங்கு உரைத்து வெற்றி காண்பதும் உண்டு. இது பட்டாங்குப் புதினம். (Materialistic Novel) என்பர். டாக்டர் மு. வ. வின் 'அல்லி', 'அகல் விளக்கு,' 'பெற்ற மனம்' ; கண்ணதாசனின் 'சிவப்புக்கல் மூக்குத்தி', 'அவள் ஒரு இந்துப்பெண்' ; ஜெயகாந்தனின் 'யுகசந்தி', 'ஒரு நடிகை நாடகம் பார்க்கிறுள்' முதலியன இவ்வகையைச் சேர்ந்தவை.

**வரலாற்று அடிப்படை :-**

முன்பு நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கற்பனைக் கண்ணுல் கண்டு, வரலாற்று நிகழ்ச்சிக் குறிப்புக்களை மூலமாக வைத்து எழுதுவது இப் புதினங்களாகும்.

கல்கியின், 'சிவகாமியின் சபதம்,'' 'பார்த்திபன் கனவு', 'பொன்னியின் செல்வன்', செகசிற்பியனின் 'நந்திவர்மன் காதலி', 'திருச்சிற்றம்பலம்', அகிலனின் 'கயல்விழி' 'வேங்கையின் மைந்தன்' நா. பார்த்தசாரதியின் 'ஆத்மாவின் ராகங்கள்', கருணாநிதியின் 'சேரமான் காதலி', சாண்டில்யனின் 'ஜீவபூமி', அரு. ராமநாதனின் 'அசோகன் காதலி' ஆகிய இவை வரலாற்று அடிப்படையில் சிறந்த புதினங்களாகும்.

**பிற அடிப்படை :**

அ) இயற்கை இறந்த நிகழ்ச்சிகளை வைத்து (abnormal) கதை பின்னுவது ஒரு வகை. 'அலாவுதினும் மாய விளக்கும்', 'பஞ்ச தந்திரக் கதைகள்' 'புராணங்கள்' இவை இவ்வகையைச் சாரும்.

ஆ) விஞ்ஞானச் செய்திகளை மூலமாகக் கொண்டு கதை எழுதுதல் உண்டு. சுசாதாவின் 'கம்பியூட்டர் பேசுகிறது' 'பெண் இயந்திரம்' முதலியன இவ்வகையினவாம்.

இ) வியப்பூட்டும் செய்திகளைத் தொகுத்துத் துப்பறியும் கதைகளாக வருபவை ஒரு பகுதி. வடுவூர் துரைசாமி அய்யங்கார் எழுதிய 'திகம்பர சாமியார்' தமிழ்வாணன் எழுதிய 'சங்கர்லால்' மேதாவி எழுதிய 'பேய்வீடு' சுசாதா எழுதிய 'மேற்கே ஒரு குற்றம்' 'நைலான் கயிறு' இராசேந்திர குமார் எழுதிய 'இன்னமும் இருக்கிறேன்' இவை துப்பறியும் கதைகள்.

ஈ) பாலுணர்வை அடிப்படையாகக்கொண்டு வெளிவரும் புதினங்கள் இன்று பலவாக உள. தி. ஜானகிராமனின் 'செம்பருத்தி', 'கு. பா இராசகோபாலனின் 'சிறிது வெளிச்சம்' ஆகியவை இந்த வகையின. இன்று இந்தப் போக்கை ஆதரித்துப் பலர் எழுதினாலும், அறிஞர்கள் ஊக்குவிப்பது இல்லை. இப்புதினங்கள் தரும் நன்மையை விடத் தீமையே மிகுதி என்பதால் சமூக உணர்வுடையார் வரவேற்பதில்லை.

உ) நகைச் சுவையை முதன்மையாகக் கொண்டு எழுதும் புதினமும் உண்டு. பாரதியாரின் 'சின்னச் சங்கரன் கதை', சாவியின் 'வாஷிங்டனில் திருமணம்', பாக்கியம் இராமசாமியின் 'அப்புசாமி பற்றிய கதைகள்' இந்த வகைப் புதினங்களுக்கு எடுத்துக் காட்டுகளாம்.

ஊ) கொள்கை விளக்க (பிரச்சார) புதினங்கள் ஒருவகை அறிஞர் அண்ணாதுரையின் 'பார்வதி. பி. ஏ,' ரங்கூன் ராதா', இரகுநாதனின் 'பஞ்சும் பசியும்,' ஜெயகாந்தனின் 'ஜெயஜெய சங்கரர்', 'பாரீசுக்குப்போ' முதலியன இவ்வகையைச் சேரும். புரட்சிக் கருத்துக்களைத் தாங்கிய சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்களைக் கொண்ட புதினங்கள் யாவும் இதில் அடங்கும்.

எ) வட்டாரப் புதினங்கள் ஒருவகையாகும். ஆர். சண்முக சுந்தரத்தின் 'சட்டி சுட்டது', தமிழண்ணலின் 'இளையவள் கொண்ட இசை பிடிமானம்' - இதற்குக் காட்டாகும்.

ஏ) மொழிபெயர்ப்புப் புதினங்கள் ஒருவகையாகும். மறைமலை அடிகளின் குமுதவல்லி, மராத்திய நாவலாசிரியர் காண்டேகரின் நூல்கள், வங்கக் கவிஞர் தாகூரின் கதைகள் டால்ஸ்டாய் கார்க்கி, 'டிக்கன்ஸ்', 'தாமஸ் ஹார்டி, முதலியோரின் புதினங்களும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

**கதை நடத்தும் முறை**

இப்புதினங்கள் கதை நடத்தும் முறையால் மூன்று திறப்படும். ஒன்று, கதை எழுதும் ஆசிரியனே நேர்முகமாய் நின்று கதையைத் தானே நடத்துவது. கல்கி, வ. வே. சு. ஐயர் முதலியோர் அக்காலத்தில் இம்முறையில் கதை எழுதினர். மற்ருென்று, கதை உறுப்பினர்கள் தமக்குள் பேசிக்கொள்வதன் மூலம் கதை நடத்துவது. சிலபோது ஒரே பாத்திரம் தன்னைப் பற்றிய செய்திகளைத் தானே பகர்வது போலத் தனித்தனிப் பல பாத்திரங்கள் அநுபவங்களைக் கூறுமாறு செய்து, தொகுத்து விடுவது உண்டு. அறிஞர் அண்ணுதுரை, அகிலன், டாக்டர். மு. வ. ஆகியோரின் புதினங்கள் இவ்வகையில் இருக்கும். பாத்திரங்களின் உரையாடலோடு எழுதிய ஆசிரியன் தன் கருத்தையும் நேர்முகமாகவே வைத்து மொழிவதும் உண்டு. நினைவோட்ட வகையில் (Flash back) நிகழ்ச்சிகளைத் தொகுத்து கதை நடத்தும் முறையும் ஒரு சிறப்பான உத்தியாகும். இந்த முறை இன்று பெருகியுள்ளது. நீலபத்மநாபனின் 'ஒரு புளிய மரத்தின் கதை' என்பது இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டு.

மேலைநாட்டார், புதினத்தின் அமைப்பைக் கொண்டு வேறு வகையாகவும் பிரித்துக் காட்டுவர்.

1. கற்பனைப் புதினம் (Romantic Novel)
2. மெய்ம்மைப் புதினம் (Realistic Novel)
3. பண்புப் புதினம் (Novel of Character)

4. பட இயல் புதினம் (Picturisque Novel)
5. நாடகப் புதினம் (Dramatic Novel)
6. உணர்ச்சிப் புதினம் (Emotional Novel)

என்றவாறு பகுத்துள்ளனர். இவையெல்லாம் இன்பியல் முடிவாகவோ (Comedy), துன்பியல் முடிவாகவோ (Tragedy) இருத்தல் கூடும்.

**பயன் :**

இப்புதினங்கள் பயன் தரும் வகையால் இரண்டு வகை. பொழுது போக்கிற்கு மட்டுமே பயன்படுவது ஒன்று இன்று வரும் புதினங்கள் பலவும் இதில் அடங்கும். மற்ருென்று சிக்கலைத் தீர்க்க உதவி நம் மனத்தில் மாற்றத்தை நிகழ்த்துவது. இத்தகையவை காலங்கடந்து என்றும் நின்று நிலவும். மொழிப் பற்ருேடு எழுதும் புதின ஆசிரியர்களால் மொழியும் வளர்ச்சி அடைகிறது. ஆனல் அண்மைக் காலமாக ஒரு குறை காணப்படுகிறது. தமிழ்ப் புதினங்களில் தமிழ் எழுத்துக்களில் ஆங்கிலத் தொடர்களோ, பிறதொடர்களோ அப்படியோ இடம் பெற்றுக் கண்ணை உறுத்துகின்றன. இது நாகரிகம் என்ற பெயரால் வரும் ஒரு பிணி. இப்பிணி ஒழியும் நாள் புதினங்களுக்கு ஊட்டமான நாள். புதின வளர்ச்சி மக்களின் மன வளர்ச்சி-மொழியின் கன வளர்ச்சி. வணிகர்க்குப் பண வளர்ச்சி ஆகவே எழுதும் ஆசிரியர், வெளியிடும் வணிகர், படிக்கும் மக்கள் ஆகியோர் புதின வளர்ச்சி, தன் வளர்ச்சி என்று கருதினுல் சமுதாயம் நலம் பெறும்.

